# உருளைக்கிழங்கு வடையை எல்லோரும் விரும்புவார்கள்



# டால்டாவில் தயாரித்தால்




நீங்கள் சூடாகவோ, குளிர்ந்தோ உட்கொள்ளும் பதார்த்தங்களுடையவும், தித்திப்புப் பண்டங்களுடையவும் ருசியை டால்டா நிச்சயமாக மேம்படுத்த உதவுகிறது. அன்றியும் டால்டா எல்லா சமையல் முறைகளுக்கும் உகந்தது. சுத்தமானதும், ஊட்டமளிப்பதுமான டால்டா கைபடாமல் தயாரிக்கப் பட்டது. சீல்செய்த டின்களில் எப்பொழுதும் புதிதாகவும், சுப்புரவாகவும் உங்களுக்குக் கிடைக்கிறது.



## சுலபமாக எளிதில் தயாரிக்கும் முறை:

வெந்த உருளைக்கிழங்கை சிறி தாக அரிந்து, காரமான மசா லா, அரைத்த இஞ்சி, ருசிக்குத் தேவையான உப்பு இவைகளைக் கலந்து இலேசாக வறுத்துக்கொள்ளவும். பிசைந்தமாவு உருண்டைகளை தட்டை யாக பரத்தவும். கலவையை தட்டை களின் நடுவில்வைத்து விளிம்புகளை ஒன்றுசேர்த்து மூடவும். இவைகளை மெதுவாக சிறிது பரத்தி, வாணலியில் சூடான டால்டாவில் ஒரேபோல் சிவக் கும்வரை பொரிக்கவும்.



## இதை நழுவ விடாதீர்கள்!

புதிய டால்டா சமை யல் புத்தகம்—ஆங்கி லத்தில் — படங்கள் கொண்டது — ஆர்ட் காகிதம்—80 பக்கங்கள்—300 அயல் - இந்திய, ஐரோப்பிய தின்பண்டங்கள் — ஆரோக்கி யம், சுகாதாரம், சமையலறை இவைகளைப்பற்றிய குறிப்புகள் —விலை ரூ. 1/- தான். தபால் செலவு அணா 8 தனி.

தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால்பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 153-330 TM

# பொருள் அடக்கம்

கல்கி


| மலர் 11 இதழ் 10 | 1951 அக்டோபர் 7 | கர ௵ புரட்டாசி 21உ |
|---|---|---|




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## நாங்கள் இருக்கிறோம்!




## கபட சந்நியாசி!




"இந்து மகா சபை, ஆர். எஸ். எஸ். போன்ற வகுப்புவாத ஸ்தாபனங்களின் பிரசாரத்துக்குச் செவி சாய்க்க வேண்டாம்" என்று நேருஜி தேர்தல் இயக்கத்தை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 10

# பெருமிதம் அடைவோம்

சென்னைக் கடற்கரையில் சில வாரங்களுக்கு முன்பு ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. அதில் ஆச்சாரிய கிருபளானி தமது புதிய பிரஜா கட்சிக்கு அங்குரார்ப்பணம் செய்து ஒரு பேருரை நிகழ்த்தினார். அந்தப் பேருரையில் அடிக்கடி மகாத்மா காந்தியின் பெயரைக் குறிப்பிட்டார். "மகாத்மா அப்படிச் சொன்னார்; இப்போது இப்படி நடக்கிறது" என்று பல உதாரணங்களைச் சுட்டிக் காட்டினார். கூட்டத்திற்கு ஜனங்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தார்கள். போனவர்களில் இரண்டு பேர் பின் வருமாறு பேசிக் கொண்டு போனார்கள்:—

"ஏனப்பா! இந்தக் கிருபளானி என்கிறவர் யார்! மந்திரியோ?"

"நம் ஊர் மந்திரி இல்லை! வேறு ஊர் மந்திரியோ என்னமோ?"

"மந்திரியாயிருந்தாலும் சரி, யாராயிருந்தாலும் சரி, திரும்பத்திரும்ப 'மகாத்மா காந்தி' 'மகாத்மா காந்தி' என்றுதான் சொல்லுகிறார்கள். சொல்லுகிறார்களே தவிர யாரும் மகாத்மா சொன்னபடி நடக்கிறதில்லை!"

அவ்வளவாகத் தற்கால அரசியல் நிலைமையை அறிந்து கொள்ளாதவர்கள் தான் மேற்கண்டவாறு பேசிக் கொண்டு போனார்கள். ஆயினும் அதில் உண்மை இல்லாமற் போகவில்லை. மந்திரியா யிருந்தாலும் சரி, வேறு எந்த அரசியல் வாதியா யிருந்தாலும் மகாத்மாவின் பெயரைத்தான் சொல்கிறார்கள். அக்டோபர் 2-ந்தேதி யன்று இந்தியா தேச மெங்கும் நடந்த பொதுக்கூட்டங்களில் ஆயிரமாயிரம் தடவை பலரும் அவருடைய பெயரைச் சொன்னார்கள். அந்த வரையில் நாம் சந்தோஷப் பட வேண்டும். மகாத்மா சொன்னபடி செய்தாலும் செய்யா விட்டாலும் அவர் பெயரைச் சொல்லுவதற்காகவே நாம் மகிழ்ச்சி அடைய வேண்டும்.

* * * *

இரண்டு வருஷம் சேர்ந்தாற்போல் நல்ல மழை பெய்தால் நம் உணவுப் பஞ்சம் தீர்ந்து போய்விடும். இரண்டு ஆண்டுகள் நல்ல மந்திரிகள் இருந்து நேர்மையாக நிர்வாகம் நடத்தினால் நம் வாழ்க்கைக் குறைகள் பலவும் தீர்ந்து போய்விடும்.

மழை பெய்யாதது இயற்கையின் கோளாறு. நல்ல அரசாங்க நிர்வாகம் நடைபெறாதது நாம் எடுத்த பிரதிநிதிகளின் தவறு; அதாவது நம்முடைய தவறு.

இத்தகைய தற்காலிகக் குறைகளையே நினைத்துக் கொண்டு நமக்கு வந்த மகத்தான அதிர்ஷ்டத்தை மறந்து விடலாமா? நம் வாழ்நாளில் நாம் அடைந்த மகா பாக்கியத்தைக் குறைவாகச் சொல்லலாமா? கூடவே கூடாது!

உண்மையில் இந்தியா தேசத்தில் சென்ற ஆயிரம் ஆண்டுகளில் வாழ்ந்தவர்களைக் காட்டிலும் நாம் பாக்கியசாலிகள்.

காந்திமகான் வாழ்ந்திருந்த காலத்தில் நாமும் வாழ்ந்தோம்; காந்திமகான் அவதரித்த நாட்டில் நாமும் பிறந்தோம். இதைக் காட்டிலும் நாம் அடையக் கூடிய பாக்கியம் வேறு என்ன இருக்க முடியும்!

உலகத்தில் ஆயிரம் வருஷத்திற்கு ஒரு முறைதான் காந்திமகானைப் போல் மாந்தருக்குள் ஒரு தெய்வம் தோன்றக் கூடும். இதற்குமுன் ஆயிரம் ஆண்டுகளில் இப்படி ஓர் உத்தமர் உலகில் பிறந்ததில்லை. மக்கட் குலம் உய்ய வழி காட்டியதுமில்லை.

கத்தி எடுக்காமல், இரத்தம் சிந்தாமல், நாற்பது கோடி ஜனங்கள் அன்னியரின் அடிமைத்தனத்திலிருந்து சாத்வீக முறையில் விடுதலை அடைந்ததற்கு உலக சரித்திரத்தில் இதுவரை உதாரணமே கிடையாது. அந்த முறையில் சுதந்திரம் அடைந்ததுதான் அதற்கு முதலாவது உதாரணம். அந்த அற்புதத்தை நம் கண் முன்னால் சாதித்துக் காட்டியவர் காந்தி மகான்.

அக்டோபர் மாதம் 2-ம் தேதி அந்த உலகோத்தமரின் ஜன்ம தினம். அன்று இந்தியா தேசமெங்கும் காந்தி ஜயந்தி கொண்டாடினார்கள்.

இன்னும் நூறு வருஷங்களுக்குப் பிறகும் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் நம் சந்ததிகள் காந்தி ஜயந்தி கொண்டாடுவார்கள். இதைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு உற்சாகத்துடன் கொண்டாடுவார்கள். புனிதமான சமயப் பண்டிகையாகக் கொண்டாடுவார்கள்.

காந்திஜியின் காலத்தில் வாழ்ந்த நம்மை எண்ணி நம் சந்ததிகள் பெருமை கொள்வார்கள். "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று கோஷமிட்ட நமது தேசத் தொண்டை எண்ணிக் குதூகலமடைவார்கள். அதை யெல்லாம் சிந்தித்துப் பார்த்து இப்போது நாம் பெருமித மடைவோமாக! அற்பமான தாற்காலிகக் குறைபாடுகளையே எண்ணிக்கொண்டு, நாம் அடைந்துள்ள பாக்கியத்தை மறந்து விடாமல் இருப்போமாக!

# யோக்கியர்களுக்குப் பஞ்சமோ?

நாட்டில் உள்ள அரிசிப் பஞ்சம், துணிப் பஞ்சம், காகிதப் பஞ்சம் முதலியவை ஒருபுறமிருக்க, "யோக்கியர்களுக்கும் பஞ்சமோ!" என்று கேட்கும்படியான ஒரு விபரீத நிலைமை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.

பண்டித ஜவாஹர்லால் நேரு மறுபடியும் 'யோக்கியர்'களின் விஷயத்தை வற்புறுத்திச் சொல்லி யிருக்கிறார்.

"காங்கிரஸ் அபேட்சகர்களாக யோக்கியர்களைப் போடுங்கள்! யோக்கியர்களையே போடுங்கள்! யோக்கியர்களைத்தானே போடுங்கள்! சில ஸ்தானங்கள் காங்கிரஸுக்குக் கிடைக்காமல் போனாலும் பாதகமில்லை. வெற்றியைப் பற்றிக் கவலைப் படாமல் யோக்கியர்களை மட்டுமே போடுங்கள்!" என்று தலையில் அடித்துக் கொண்டு கதறி யிருக்கிறார்.

இன்னும் அவர் என்ன சொல்லி யிருக்கிறார், தெரியுமா!

"யோக்கியப் பொறுப்போடு திறமையும் உள்ளவர்களைப் போடுங்கள். அப்படி இரண்டும் உள்ளவர்கள் கிடைக்காமற் போனால் திறமையை விட்டு விட்டு யோக்கியர்களையே போடுங்கள்!" என்று யோக்கியப் பொறுப்புக்கு அவ்வளவு முக்கியம் கொடுத்துச் சொல்லி யிருக்கிறார்.

இத்துடன் நிற்காமல், இன்னும் ஒருபடி மேலேயும் ஜவாஹர்லால்ஜி சென்றிருக்கிறார்.

"யோக்கியர்களா யிருப்பது மட்டுமே போதாது. 'இவர்கள் யோக்கியர்கள்தான்' என்று ஜனங்களால் ஒப்புக் கொள்ளப் பட்டவர்களாயு மிருக்க வேண்டும்!" என்று ஜயக் கிரீடக் கிடமின்றி வரையறுத்துச் சொல்லி யிருக்கிறார்.

ஜவாஹர்லால்ஜியைப் பின்பற்றி மாகாணத் தலைவர்களும் பேசி வருகிறார்கள்.

"யோக்கியர்களையும், திறமைசாலிகளையுமே காங்கிரஸ் அபேட்சகர்களாகப் பொறுக்கி எடுப்போம்!" என்கிறார் ஸ்ரீ காமராஜ நாடார்.

"ஆமாம்; யோக்கியர்களைத் தவிர வேறு யாரையும் பொறுக்கி எடுக்க மாட்டோம்" என்கிறார் ஸ்ரீ டி. பி. கப்பையா.

"யோக்கியர்களையே எடுப்போம்; மற்றவர்களைக் கட்டாயம் விடுப்போம்!" என்கிறார் கனம் எம். பக்தவத்சலம்.

"என்ன அதிசயத்தைச் சொல்வது! நாங்கள் போகுமிடங்களி லெல்லாம் ஜனங்கள் 'யோக்கியர்களைப் போடுங்கள்!' என்கிறார்கள். அப்படியிருக்கும்போது யோக்கியர்கள் அல்லாதவர்களை நாங்கள் எப்படிப் பொறுக்க முடியும்!" என்கிறார் கனம் பெருமாள்சாமி ரெட்டியார்.

இந்தப் பேச்சை யெல்லாம் அன்னிய நாட்டிலிருந்து இந்நாட்டுக்கு வந்திருப்பவர்கள் கேட்கும் போது ஆச்சரியமடைவார்கள். நாம்கூடச் சிறிது யோசித்துப் பார்த்தால் ஆச்சரிய மடைவோம்.

சுதந்திர இந்தியாவின் பார்லிமெண்டுக்கும் மாகாண சட்டசபைகளுக்கும் நியமிக்கும் அபேட்சகர்கள், அதிலும் காங்கிரஸ் நியமிக்கும் அபேட்சகர்கள், யோக்கியரல்லாதவர்களாயும் இருக்க முடியுமா! அப்படி நினைக்கவும் முடியுமா!

முடியாதென்றால், யோக்கியப் பொறுப்பைக் குறித்து எதற்காக இப்படி எல்லாரும் இவ்வளவு வற்புறுத்திப் பேசுகிறார்கள்!

"எங்கப்பா குதிருக்குள் இல்லவே இல்லை!" என்று சொன்ன கதையாக இருக்கிறதே!

இவர்கள் எல்லாரும் இப்படித் திருப்பித் திருப்பிச் சொல்வதைப் பார்த்தால், ஒருவேளை இந்த நாட்டில் யோக்கியர்களுக்கு உண்மையிலேயே பஞ்சம் வந்து விட்டதோ!

ஆங்கில நாட்டு ஜான்ஸன் "அரசியல் பாதுக்கோர் களின் அடைக்கலம்!" என்று சொன்னனே, அந்த வார்த்தை இந்தியாவில் அதற்குள்ளே உண்மையாய்ப் போய்விட்டதோ!—இப்படி யெல்

## உதவி வேண்டுமா?




"இது ஒரு அரசியல் விளையாட்டு. யார் யார் எந்தெந்தக் கட்சியில் சேர விரும்புகிறார்களோ அதில் சேரலாம்." —கித்வாய்.

லாம் பொது மக்கள் சிந்திக்கத் தொடங்குவது இயல்பேயாகும்.

உண்மை என்னவென்றால், இந்தப் புண்ணிய பாரத பூமியில் யோக்யர்களுக்குப் பஞ்சம் வந்து விடவில்லை. எத்தனையோ யோக்யர்கள் நாடெங்கும் இருக்கத்தான் இருக்கிறார்கள்; திறமைசாலிகளும் இருக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் சட்டசபை அபேட்சகர்களாக மனுப் போடத் தயங்குகிறார்கள்.

"பனைமரத்தின் அடியிலிருந்து பாலைக் குடித்தாலும் சந்தேகம் உண்டாகும்" என்று சொல்வார்கள் அல்லவா!

அதுபோல எப்படிப்பட்ட யோக்யர்களும் சட்டசபைக்குப் போய்விட்டால் தங்கள் பெயருக்கு மாசு வந்து விடுமோ என்று அஞ்சும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது.

ஏற்கெனவே நமது இந்தியப் பார்லிமெண்டிலும் மாகாண சட்டசபைகளிலும் அங்கத்தினர் பதவி வகிப்பவர்களில் சிலர் அத்தகைய கீர்த்தியை அச் சபைகளுக்கு ஏற்படுத்தி விட்டார்கள்.

இந்தியப் பார்லிமெண்டில் ஒரு முட்கல் அகப்பட்டுக் கொண்டார்; வெளியேற்றப்பட்டார்.

இன்னும் பல முட்கல்கள் பார்லிமெண்டிலும் இருக்கிறார்கள்; மாகாண சட்டசபைகளிலும் அமோகமாக இருக்கிறார்கள்.

இவர்களினால் ஏற்பட்டிருக்கும் அபகீர்த்தி காரணமாகவே,

"சட்டசபை அபேட்சகர்களாக நிற்பதற்கு
யோக்யர்கள் தேவை!
தோற்றுப் போனாலும் பாதகமில்லை!"

என்று பண்டித ஜவாஹர்லால் நேரு விளம்பரம் போடும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இது காரணமாகவே, யோக்யப் பொறுப்பைத் தங்கள் முக்கிய செல்வமாகக் கருதியிருப்பவர்கள் விண்ணப்பம் போடத் தயங்குகிறார்கள்.

முதலாளி வர்க்கத்தினர் விண்ணப்பம் போட்டிருக்கிறார்கள்.

பணக்காரர்கள் மனுப் போட்டிருக்கிறார்கள்.

ஜில்லா போர்டு நகர சபைப் பிரமுகர்கள் போட்டிருக்கிறார்கள்.

காங்கிரஸ் தியாகிகள் போட்டிருக்கிறார்கள்.

ஆனால் யோக்கியர்கள் என்று ஊர் அறிந்தவர்கள் அதிகம் பேர் விண்ணப்பம் போட்டிருப்பதாகத் தெரியவில்லை.

பழைய சட்டசபை அங்கத்தினர்களில் பலர் முண்டியடித்துக்கொண்டு மனுப் போட்டு, இடித்துத் தள்ளிக் கொண்டு முன் வந்து நிற்கிறார்கள். அவர்களையே நிறுத்த வேண்டும் என்று போஸ்டர்களும் மகஜர்களும் தயாரித்துக் கொண்டு வருகிறார்கள்.

ஆனால் மாசற்ற நடத்தை யுள்ளவர்களும் காந்திய வழியைக் கடைப் பிடிப்பவர்களுமான மதுரை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர், ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன், சர்தார் வேதரத்தினம் பிள்ளை, ஓமந்தூர் ஸ்ரீ ராமசாமி ரெட்டியார் முதலியோர் மனுப் போடவில்லை.

இதனால் மாகாணத் தேர்தல் கமிட்டிக்குத் தர்ம சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இதன் பொருட்டு, தேர்தல் கமிட்டி அங்கத்தினர்களிடம் அனுதாபப்படுகிறோம்.

எனினும், இந்த நிலைமையிலிருந்து விடுபட்டு நாட்டைச் சீர்திருத்துவதற்கு அவர்கள் கைக்கொள்ளக்கூடிய வழி ஒன்று இருக்கிறது.

இப்போதுள்ள சட்டசபை அங்கத்தினரில் பெரும்பாலோரைத் திரும்ப நிறுத்துவதில்லை என்று அவர்கள் தீர்மானித்து விடவேண்டும்.

அவர்களில் பலர் குற்றமற்றவர்களாயிருக்கலாம்; நல்ல தேசபக்தர்களாயுமிருக்கலாம்; யோக்யர்களாகக் கூட இருக்கலாம்.

இருந்தால்தான் என்ன!

ஏதோ ஐந்து வருஷம் சட்டசபையில் தூங்கிச் சேவை செய்தாயிற்று.

இனிமேல் அவர்கள் வெளியில் இருந்து சில காலம் சேவை செய்யலாம் அல்லவா!

புதிய மனிதர்களுக்கு இடம் கொடுத்துப் பார்க்கலாம் அல்லவா!

இந்த மாதிரி தேர்தல் கமிட்டியார் தீர்மானித்திருப்பதாகத் தெரிந்தால் 'யோக்யர்கள்' என்று ஊர் அறிந்த மனிதர்கள் பலர் காங்கிரஸ் அபேட்சகர்களாக நிற்க முன்வரக் கூடும்.

தேர்தல் கமிட்டியாரின் தர்ம சங்கடமும் தீரும்.

# வாக்காளர் துள்ளிக்குதிக்கிறார்!

இந்நாட்டு மன்னராகிய மகா ராஜ ராஜ ஸ்ரீ வாக்காளர் துள்ளிக் குதித்தார்! மேல் வேஷ்டியை எறிந்து பிடித்தார்! குதூகலம் தாங்காமல் ஒரு குட்டிக்கரணமும் அடித்தார்! தன் முதுகில் தானே தட்டிக் கொடுத்துக் கொண்டார்! "அப்பனே! வாக்காளனே! உன்னைப் பற்றிக் கவனிக்கிறவர்களும் ஊரில் இருக்கிறார்கள்! உன் பாடு யோகந்தான்!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு சந்தோஷப்பட்டார்.

இவ்வளவும் எதனால் ஏற்பட்டது என்றால், சென்ற ஞாயிற்றுக்கிழமை சென்னை மா நகரில் நடைபெற்ற வோட்டர் மகாநாடு காரணமாகத்தான். அந்த மகாநாட்டில் ஸ்ரீ வோட்டர் அவர்களின் உருவப்படங்கூடத் திறந்து வைக்கப்பட்டதாம்! என்ன அதிசயம் பாருங்கள்!

மேற்படி வோட்டர் மகாநாட்டைத் திறந்து வைத்தவர் "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன். தலைமைப் பீடத்தில் இருந்து நடத்தியவர் ஸ்ரீ ஏ. வி. ராமன். அவரைத் தலைவராகப் பிரேரேபித்து அருமையான சொற்பொழிவு நிகழ்த்தியவர் ஸ்ரீ திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்.

இந்த மூன்று பிரமுகர்களும் பேசியவற்றின் முக்கிய சாராம்சம் என்னவென்றால்:—"இப்போது நமக்கெல்லாம் கிடைத்திருக்கும் வோட்டுரிமை ஓர் அருமையான விலை உயர்ந்த சொத்து. அதை யோசனையின்றி வீண் விரயம் செய்து விடக்கூடாது. அபேட்சகர்கள் ஒரு கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதற்காக வோட்டுப் போட்டுவிடக்கூடாது. யோக்கியதையும் தகுதியும்-திறமையும்

உள்ளவரா, சட்டசபை வேலைக்கு முழு நேரமும் செலவழித்து உழைக்கக் கூடியவரா, என்று கவனித்து வோட்டைப் போட வேண்டும். அபேட்சகர்களே நேரில் வந்து வாக்காளர்கள் முன்னிலையில் பேசச் சொல்ல வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு ஒரு பிரதிநிதி திருப்திகரமாக வேலை செய்யா விட்டால் அவரைத் திருப்பி அழைக்க அதாவது ராஜிநாமா செய்யும்படி வற்புறுத்த அபேட்சகர்களுக்கு உரிமை வேண்டும்.''

இவ்வித மெல்லாம் மேற்படி மகாநாட்டில் வோட்டர்களின் உரிமைகளை வற்புறுத்திப் பேசினார்கள். கடமைகளை எடுத்துக் காட்டிப் பேசினார்கள்.

இம்மாதிரி ஓர் இயக்கம் மிக அவசியம் என்பதில் ஐயமில்லை. வாக்காளர் தங்கள் வாக்கின் பெருமையை உள்ளபடி உணர்ந்து அதைச் சரிவர உபயோகிக்கவும் கற்றுக் கொண்டால்தான் ஜனநாயகம் வெற்றிகரமாக நடக்க முடியும்.

ஆயினும் இதில் ஒரே ஒரு சங்கடம் இருக்கிறது. தகுதி, காணயம், திறமை இவற்றை யெல்லாம் முதலில் எப்படி நிர்ணயிப்பது ! யார் நிர்ணயிப்பது ! ஒவ்வொரு தொகுதியிலும் சாதாரணமாய் எழுபதினாயிரம் எண்பதினாயிரம் வோட்டர்கள் இருக்கிறார்கள். இவ்வளவு பேரும் தனித் தனியே அபேட்சகர்களின் காணயம், தகுதி முதலியவற்றை நிர்ணயிக்க முடியுமா ! எப்படி முடியும்!

இதற்குத்தான் வழிகாட்டி தேவையா யிருக்கிறது. இன்னின்னார் தகுதியும் காணயமும் உள்ளவர்கள் என்று யாராவது எடுத்துச் சொல்ல வேண்டி யிருக்கிறது. வோட்டர்களுக்கு இந்த உதவியைக் காங்கிரஸ் தலைவர்கள் செய்வார்கள் என்று எதிர்பார்க்கப் படுகிறது. அவர்கள் அதைச் சரிவரச் செய்கிறார்களா என்பதை ஸ்ரீ பி. ஆர். சீனிவாசன், ஸ்ரீ ஏ. வி. ராமன், திரு வி. க. முதலியவர்கள் கவனித்துச் சொல்ல வேண்டும். இது மகா ராஜ ராஜ ஸ்ரீ வோட்டருக்கு மேற்படி பிரமுகர்கள் செய்யும் உதவியா யிருக்கும்.

# “ நானா? கிருபளானியா ?”

ஸ்ரீ கி. பி. கப்பையா நல்ல பேச்சுக்காரர். உதாரண உபமேயங்களுடன் விகடித சாமர்த்தியமாகப் பிரசங்கமாரி பொழியக் கூடியவர்.

சமீபத்தில் தேர்தல் கமிட்டியின் அங்கத்தினராக அவர் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தார். சில இடங்களில் தம்மையும் ஆச்சாரிய கிருபளானியையும் ஒப்பிட்டுப் பேசினார். திருநெல்வேலியில் அவர் பேசியதாவது :—

“ நானும் ஸ்ரீ காமராஜ நாடாருடன் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்தானத்துக்காகப் போட்டி யிட்டேன். தோற்றுப் போனேன். அதனால் என்ன ! காங்கிரஸை விட்டுப் போய் விட்டேனா ! இந்த வருஷத்தில் இல்லாவிட்டால், இன்னும் இரண்டு வருஷத்தில் ஸ்ரீ காமராஜ நாடாரை வென்று அவருடைய ஸ்தானத்துக்கு வந்து விடுவேன். (கரகோஷம்) ஆச்சாரிய கிருபளானி காங்கிரஸ் தலைவர் பதவிக்குப் போட்டி யிட்டார். கிடைக்கவில்லை. அதற்காக வெளியிலே போய்த் தனிக் கட்சி ஸ்தாபித்திருக்கிறார். காங்கிரஸுடன் போட்டி போடப் போகிறார். நான் நல்லவனா ! கிருபளானி நல்லவரா !” (கரகோஷம்)

ஏறக்குறைய ஸ்ரீ கி. பி. கப்பையா மேற்கண்டவாறு பேசியதாக அறிகிறோம். வார்த்தைக்கு வார்த்தை சரியான 'ரிப்போர்ட்' அல்ல.

ஸ்ரீ கி. பி. கப்பையாவுக்கு ஒரு விஷயத்தை ஞாபகமூட்ட விரும்புகிறோம். சென்ற வருஷத்தில் அவர் மாகாண காரியக் கமிட்டியில் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். அந்தப் பதவியை அவர் ஒப்புக் கொள்ள முடியாது என்று ராஜிநாமாச் செய்தார். ஏன் ! அப்போது ஏன் காங்கிரஸிலிருந்து ஒத்துழைக்கும் மனப்பான்மை அவரை விட்டுப் போயிருந்தது ! ஏனெனில் மாகாண காரியக் கமிட்டியார் செய்யக் கூடிய காரியங்கள் அவரால் ஒத்துக் கொள்ள முடியாதவையா யிருக்கும் என்று அவர் எண்ணினார். அத்தகைய கமிட்டியில் அங்கத்தினரா யிருந்து அக் காரியங்களுக்குப் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ள அவர் விரும்பவில்லை.

பண்டித ஜவாஹர்லால் நேரு சென்ற மாதத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்து ராஜிநாமா செய்தார். ஏன் ! “காரியக் கமிட்டியின் காரியங்களுக்கு நான் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ள முடியாது !” என்ற காரணத்தைத்தான் ஜவாஹர்லால்ஜியும் சொன்னார்.

அதே மார்க்கத்தில் ஆச்சாரிய கிருபளானி இன்னும் ஒரு சில அடிகள் முன்னால் போயிருக்கிறார் ; அவ்வளவுதான்.

“காங்கிரஸில் ஊழல்கள் மலிந்து விட்டன ; இனிச் சீர்திருத்தவே முடியாது ; சரியான பிரதிநிதிகளைக் காங்கிரஸ் தேர்ந்தெடுக்கப்போவதில்லை; ஆகையால் வெளியேறித் தனிக் கட்சி ஸ்தாபித்து என்னாலியன்ற தொண்டைச் செய்யப் போகிறேன்” என்று ஆச்சாரிய கிருபளானி சொல்கிறார்.

ஆச்சாரிய கிருபளானி செய்கிறது சரியா, ஸ்ரீ கி. பி. கப்பையா செய்கிறது சரியா என்று இதற்குள்ளே தீர்மானித்துவிட முடியாது.

சட்டசபை அபேட்சகர்களை இரு கட்சிகளும் தேர்ந்தெடுத்த பிறகுதான் சொல்ல முடியும்.

“நான் என்ன செய்வேன் ! நல்ல யோக்கியர்களான அபேட்சகர்களைப் பொறுக்கி எடுக்கத்தான் நான் முயன்றேன். ஆனால் தேர்தல் கமிட்டியில் பெரும்பான்மையோர் எனக்கு விரோதமா யிருந்து விட்டார்கள். ஆகையால் வெற்றி பெறவில்லை. ஐந்து வருஷங்களுக்குப் பிறகு அடுத்த தேர்தலுக்கு நல்ல அபேட்சகர்களைப் பொறுக்க முயற்சி செய்வேன் !” என்று ஸ்ரீ கி. பி. கப்பையா நாளைக்குச் சொல்லும்படி நேரிடலாம்.

அப்படியானால், அவருடைய போக்குச் சரியான போக்கு என்று பொது ஜனங்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

“வெளியேறிய கிருபளானியே நல்லவர்” என்றுதான் சொல்லும்படி யிருக்கும்.

இதற்கு மாறாக, ஸ்ரீ கி. பி. கப்பையா போராடி மல்லாடி, பொது மக்கள் குதூகலத்துடன் ஒப்புக் கொள்ளக்கூடிய அபேட்சகர்களைக் காங்கிரஸின் சார்பாக நிறுத்துவதில் வெற்றி பெற்றால், அப்போது “சபாஷ் கப்பையா !” என்று அவரைப் பாராட்டலாம். அவருடைய போக்குத்தான் சரி, ஆச்சாரிய கிருபளானியின் போக்கு சரியல்ல என்றும் ஒப்புக் கொள்ளலாம்.

அபேட்சகர் ஜாபிதா வரட்டும், பார்ப்போம்.

# வானம் இருண்டது!

"திடுக்கிட்டோம்" "திகைத்துவிட்டோம்" "துயரக் கடலில் மூழ்கினோம்" என்றெல்லாம் சொல்வது சம்பிரதாயமாகப் போய்விட்டது. ஆயினும் ஸ்ரீ பி. யூ. சின்னப்பாவின் மரணச் செய்தியை அறிந்து திடுக்கிட்டோம் என்று கூறுவதில் சம்பிரதாயம் சிறிதுமில்லை. அவர் இப்படித் திடீரென்று நம்மையும் வெள்ளித் திரையையும் விட்டுப் போவார் என்று யார்தான் எதிர்பார்த்திருக்க முடியும்! பல்லாயிரக்கணக்கான அவருடைய அபிமானிகளுக்குச் சின்னப்பா இல்லாத சினிமா வானம் இருண்டு கிடக்கும் என்பதில் சந்தேகமும் உண்டோ!

ஸ்ரீ சின்னப்பா சென்ற பதினைந்து வருஷ காலத்தில் எத்தனையோ படங்களில் நடித்திருக்கிறார். அவற்றில் சில படங்கள் நல்ல வெற்றி யடைந்தன. சில சாதாரணமாக முடிந்தன. ஆயினும் படத்தின் வெற்றி தோல்விகள் அவரைச் சிறிதும் பாதிக்கவில்லை. மேலும் மேலும் அவருக்கு சினிமா உலகில் கிராக்கி வந்து கொண்டிருந்தது. இதன் இரகசியம் என்ன! மக்கள் விரும்பும் சிறந்த அம்சங்கள் பல அவருடைய நடிப்பில் சேர்ந்திருந்தன. இராஜகுமாரனை நடித்தாலும், பிச்சைக்காரனை நடித்தாலும் உண்மையான சிரத்தையுடன் அந்தந்தப் பாத்திரத்தின் தன்மை தோன்றும்படி அவர் நடித்தார். பேச்சு, பாட்டு, தோற்றம் எல்லாம் அளவாக அமைந்திருந்தன. ஆகையினாலேயே சினிமா உலகில் அவருடைய புகழ் அத்தனை காலம் நீடித்திருந்தது.

ஆயினும், தமது நடிப்புத் திறமை முழுமையும் சினிமா முதலாளிகள் நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்ற குறை அவருக்கு இருந்தது. இதை முன்னிட்டுத் தாமே ஒரு படம் எடுக்க ஏற்பாடு செய்திருந்தார். அந்த ஏற்பாடு முடிவதற்குள் கொடிய விதி குறுக்கிட்டு விட்டது!

சினிமா நட்சத்திரங்களுக்குள்ளே பொது முயற்சிகளில் விசேஷ சிரத்தை கொண்டவர்களில் ஸ்ரீ சின்னப்பாவும் ஒருவர். பாரதி மண்டபத் திருப்பணி ஆரம்பித்தபோது யாரும் கேளாமல் அவராகவே ரூபாய் ஐந்நூறு நன்கொடை அனுப்பினார். பாரதி மண்டபத் திறப்பு விழாவின் போதும் அவ்வாறு நன்கொடை அனுப்பிக் கடிதமும் எழுதியிருந்தார்.

பத்திரிகையாளர் சங்கக் கட்டிட நிதிக்காக ஸ்ரீ சின்னப்பாவைச் சில பத்திரிகைக்காரர்கள் அணுகியபோது அவருடைய மரியாதையையும் உயர்ந்த பண்பாட்டையும் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள்.

ஸ்ரீ சின்னப்பாவின் மரணத்தைக் குறித்து ஆறாத் துயர் அடைந்துள்ள அவருடைய நண்பர்களின் தொகையைப் பார்க்கும்போது அவர் எத்தகைய அருங் குணம் படைத்தவரா யிருந்திருக்க வேண்டும் என்பது நன்கு வெளியாகிறது. ஸ்ரீ சின்னப்பாவின் வயது முதிர்ந்த தந்தையாருக்கும் குடும்பத்தாருக்கும் அவருடைய எண்ணற்ற நண்பர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அட்டைப்பட விளக்கம்

# சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாள்

சின்னஞ் சிறு பெண். பிராயம் பதினொன்று. உலகம் அறியாப் பேதை. வாழ்க்கைப் பாதையின் மேடு பள்ளங்களை வகுத்து உணர முடியாத வயது. அத்தகைய சிறுமிக்கு விவாகம் ஆகிவிட்டது! இது என்ன அதிசயம் என்று கேட்கத் தோன்றும். அந்த நாளில் அதாவது ஐம்பது வருஷத்துக்கு முன்பு இது அதிசயமில்லை. அடுத்த இரண்டு மாதங்களுக் கெல்லாம் இன்னொரு பெரும் அதிர்ச்சி அச் சிறு பெண்ணின் வாழ்க்கையில் நேர்ந்து விட்டது. விவாகம் என்றால் என்ன என்று தெரியு முன்பே அவள் கணவனை இழந்து கைம் பெண் ஆகிவிட்டாள்! என்ன பயங்கரம்! என்ன பரிதாபம்! இனிமேல் ஆரம்பமாக வேண்டிய அந்தச் சிறுமியின் இல்வாழ்க்கை ஆரம்பமாகாமலே முடிந்து விட்டது.

மகத்தான துரதிர்ஷ்டத்தில் ஓர் அதிர்ஷ்டம். அந்தச் சிறுமியின் தகப்பனார் அறிவாளி. தம் மகளுக்கு நேர்ந்து விட்ட பெரும் விபத்துக்கு ஏதேனும் ஒரு பரிகாரம் தேட விரும்பினார். சிறுமிக்கு அவள் கணவன் இறந்த செய்தியை அறிவிக்காமலே குழந்தை உள்ளத்தைப் படிப்பில் ஈடுபடச் செய்தார்.

நம் நாட்டின் அதிர்ஷ்டவசமாக, அச்சிறுமி பள்ளிப் படிப்பைப் பூர்த்தி செய்தாள். பின்னர், உறவினரின் பலத்த எதிர்ப்புக்கு இடையில் கல்லூரியிலும் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினள். ஆர்வத்துடன் படித்து பி. ஏ. பட்டமும் பெற்றார். ஹிந்து சமூகத்தில் முதன் முதலில் பி. ஏ. பட்டம் பெற்ற பெண் என்ற பெயரினை அடைந்தார். ஆம்; சமூகத்தில் ஒரு பகுதியில் பெயரி; இன்னொரு பகுதியில் அதுவே அபக்யாதியாகவும் இருந்தது. அதை அப் பெண் பொருட் படுத்தவில்லை. இதற்குள் தம் நிலை இன்னதென்று அவருக்குத் தெரிந்துவிட்டது. தம்மைப் போல் இளம் வயதிலே கணவனை இழந்து அநாதைகளான பெண்களின் சேவைக்குத் தம் வாழ்நாளையே அர்ப்பணம் செய்யத் தீர்மானித்தார். நாளது வரை அத் தீர்மானத்தைச் செயலிலும் நிறைவேற்றி வருகிறார். அவர்தான் நமது அட்டைப் படத்தில் இந்த இதழில் தோற்றமளிக்கும் சகோதரி ஆர். எஸ். சுப்புலக்ஷ்மி அம்மாள் பி. ஏ., எல். டி.

முதலில் தமது சொந்தப் பொறுப்பில் ஐந்தாறு இளம் விதவைப் பெண்களை ஏற்றுக் கல்வி புகட்டத் தொடங்கினார். நாளடைவில் அவருடைய ஒப்பற்ற சேவையின் பெருமையை உலகம் உணரலாயிற்று. அந்த நாளைய சர்க்காரும் உணர்ந்தார்கள். "விதவாசிரமம்" (Widows Home) என்னும் சேவா ஸ்தாபனம் ஏற்பட்டது. இந்த ஸ்தாபனத்தின் பொறுப்பை வகித்து சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாள் நெடுங்காலம் சேவை செய்தார். சமூகக் கொடுமையினாலும் விதிவசத்தினாலும் துர்ப்பாக்கியசாலிகளான எத்தனையோ பெண்களின் கண்ணீரைத் துடைத்து அவர்களுக்கு வாழ்வில் ஒளி காட்டி வந்தார்.

சர்க்கார் ஸ்தாபனம் என்றால், அர்த்தமற்ற நிபந்தனைகளும் கட்டுப்பாடுகளும் குறுக்கிடுவது இயல்பல்லவா? பதினெந்து வயதுக்குட்பட்ட விதவைப் பெண்களையே மேற்படி விதவாசிரமத்தில் எடுத்துக் கொள்ளலாம் என்று ஒரு விதி இருந்தது. சகோதரிக்கு இந்தக் கட்டுப்பாடு துன்பத்தை அளித்தது. கொஞ்சம் அதிக பிராயத்தில் கைம் பெண் ஆனவர்களிலும் நிர்கதி—அநாதைகள் இருக்கலாம் அல்லவா? அப்படிப்பட்டவர்களுக்குச் சேவை செய்வதற்காக ஸ்ரீ சாரதா வித்தியாலயம் என்னும் ஸ்தாபனத்தை ஏற்படுத்தினார்.

முதலில் ஐந்து மாணவிகளுடன் மேற்படி ஸ்தாபனம் ஆரம்பமாயிற்று. பிறகு, நூற்றுக் கணக்கான மாணவிகள் சேர்ந்தனர். அவர்கள் நர்ஸ்களாகவும் டாக்டர்களாகவும் உபாத்தியாயினிகளாகவும் பயிற்சி பெற்று, தங்கள் வாழ்வில் ஏற்பட்டுவிட்ட சிரந்தரமான துயரத்தை மறந்து பற்பல சமூக சேவைகளில் வாழ்நாளைச் செலவிட்டு வருகின்றனர்.

சகோதரி சுப்பு லக்ஷ்மி அம்மாள் ஆரம்பித்த ஸ்ரீசாரதா வித்தியாலயத்தை இப்போது ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஏற்றுத் திறமையாக நிர்வகித்து வருகிறது. மேற்படி வித்தியாலயத்தின் தாய்ச் சங்கமாகிய ஸ்ரீசாரதா ஐக்கிய சங்கத்தை மட்டும் சகோதரி தாமே நிர்வகித்து வருகிறார். இச் சங்கம் பெண் குலத்துக்குப் பல சிறந்த பணிகளை ஆற்றி வருகிறது.

சமூகத்தின் சிறுமைகளைப் போக்குவதென்றால், சமூகத்தின் மாசுகளை நீக்குவதென்றால், சமூகத்தின் அழுக்கை அகற்றுவது என்றால், அது இலேசில் முடிகிற காரியம் அல்ல. இடைவிடாமல் ஆக்க வேலையில் ஈடுபடும் ஊக்கம் சகோதரியிடம் நிறைந்திருக்கிறது. ஆனால் அது மட்டும் போதுமா? எத்தகைய சேவைக்கும் பொருள் உதவி தேவையாயிருக்கிறதல்லவா!

ஸ்ரீ சாரதா ஐக்கிய சங்கத்தின் கல்வி நிதிக்காக குமாரி சித்திரலேகாவின் நடன நிகழ்ச்சி ஏற்பாடு ஆகியிருக்கிறது. வரும் அக்டோபர் மாதம் 13-ம் தேதி யன்று மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையில் நடைபெறுகிறது. சென்னை மாகாணத்துக் கவர்னர் தம்பதிகள் இந்த வைபவத்துக்குத் தலைமை வகிக்கிறார்கள். மிகச் சிறந்ததொரு சமூக சேவைக்கு உதவி செய்ய இது ஒரு நல்ல சந்தர்ப்பம். பரோபகார சீலர்களும் ரஸிகர்களும் இந்த அருமையான சந்தர்ப்பத்தை நன்கு பயன் படுத்திக் கொள்வார்களென்று நம்புகிறோம்.



குமாரி சித்திரலேகா




அத்தியாயம் 36

## தகுதிக்கு மதிப்பு உண்டா?

இளவரசரும் 'நந்தினி'யும் நின்ற இடத்தை நோக்கி வந்தியத் தேவன் விரைவாகவே நடந்தான். அவன் அவ் விடத்தை அடைவதற்குள் கொஞ்சம் சந்தேகம் தோன்றி விட்டது. இவள் நந்தினிதானா? பழுவூர் ராணிக்குரிய ஆடை ஆபரணங்கள் ஒன்றுமில்லையே! சந்நியாசினியைப்போல் அல்லவா எளிய உடை தரித்திருக்கிறாள்? முகம் நந்தினியின் முகம் மாதிரி தோன்றுகிறது. ஆனால் ஏதோ ஒரு வித்தியாசமும் இருக்கிறது. அது என்ன?

அவர்கள் நின்ற இடத்துக்கு வந்தியத் தேவன் சென்றதும் அந்த ஸ்திரீ நகர்ந்து வீதி ஓரத்து வீடுகளின் நிழலில் மறைந்தாள். வந்தியத்தேவன் பரபரப்புடன் அவளைத் தொடர்ந்து செல்லப் பார்த்தான். இளவரசர் அவனுடைய கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தினார்.

"ஐயா! அந்த ஸ்திரீ யார்? பார்த்த முகமாகத் தோன்றியது!" என்றான்.

இதற்குள் அங்கு வந்து சேர்ந்த ஆழ்வார்க்கடியான், "அந்த ஸ்திரீ சோழ நாட்டின் குல தெய்வமாகத்தான் இருக்க வேண்டும். அதோ பாருங்கள்! நாம் அச்சமயம் நகர்ந்திரா விட்டால் இத்தனை நேரம் புத்தர் பெருமானின் சரணங்களை அடைந்திருப்போம்" என்றான்.

திருமலை சுட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்தார்கள். அங்கே கட்டிடத்தின் மேற்பகுதி இடிந்து விழுந்திருந்த இடம் ஒரு சிறிய குன்றைப்போல இருந்தது. ஒரு பெரிய யானையைக்கூட அந்தக் குன்று வெளியில் வர முடியாதபடி அமுக்கிக் கொன்றிருக்கும். மூன்று சிறிய மனிதர்கள் எம்மாத்திரம்?

"நல்ல சமயத்திலேதான் நம் குல தெய்வம் தோன்றி நம்மைக் கையைத் தட்டி அழைத்தது" என்றார் பொன்னியின் செல்வர்.

"இளவரசே! அந்த ஸ்திரீயை யார் என்று சொன்னீர்கள்?" என்று வந்தியத் தேவன் வியப்புடன் கேட்டான்.

"உமக்கு யார் என்று தோன்றியது? அவளைத் தொடர்ந்து போக ஏன் யத்தனித்தீர்?" என்று இளவரசர் கேட்டார்.

"சோழர்களின் குல தெய்வம் என்றல்லவா இந்த வைஷ்ணவர் சொன்னார்? சோழர் குலத்துக்குக் கேடாக வந்த தேவதையாக எனக்குத் தோன்றியது."

"அப்படி யென்றால்......? யார் என்று எண்ணிச் சொல்கிறீர்?"

"என்னுடைய பிரமைதானோ என்னமோ? பழுவேட்டரையர் இளைய தாரமாக மணந்திருக்கும் நந்தினி தேவி என்று தோன்றியது. உங்கள் இருவருக்கும் அப்படிப் படவில்லையா?" என்றான் வந்தியத் தேவன்.

"நான் நன்றாய்ப் பார்க்கவில்லை. ஆனாலும் அது உன் சித்தப் பிரமையாகத்தான் இருக்க வேண்டும். பழுவூர் ராணி இங்கு எப்படி வந்திருக்க முடியும்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"இவர் சொல்வது முழுதும் சித்தப் பிரமையன்று. கண்ணின் பிரமையும் அதில் சேர்ந்திருக்கிறது. அப்படி ஒரு அதிசயமான முக ஒற்றுமை இருப்பதாக

எனக்குக் கூடச் சிலசமயம் தோன்றிய துண்டு...வாருங்கள்! நடந்து கொண்டே பேசலாம்!'' என்றார் இளவரசர்.

வீதி ஓரமாக வீடுகளின் நிழலில் நடப்பதற்குப் பதிலாக இப்போது மூவ ரும் நடு வீதியில் நிலா வெளிச்சத்தில் நடக்கத் தொடங்கினார்கள்.

சற்று நடந்ததும், "இளவரசே! தங்களைக் கையைத் தட்டி அழைத்து அந்த அம்மான் என்ன சொன்னாள்?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"என்னைத் தேடிக் கொண்டு இரண்டு சத்துருக்கள் வந்திருக்கிறார்கள் என்று சொன்னாள். அவர்கள் என்னைக் கொல் வதற்குச் சமயத்தை எதிர் நோக்கிக் கொண்டிருப்பதாகவும் சொன்னாள்."

"அடி பாவி! ஒருவேளை எங்களைப் பற்றித்தான் அப்படிச் சொன்னாளா என்ன?" என்று வந்தியத் தேவன் திடுக்கிட்டுக் கேட்டான்.

பொன்னியின் செல்வர் சிரித்துவிட்டு, "இல்லை, நீங்கள்தான் என்று குறிப்பிட் டுச் சொல்லவில்லை. அப்படி நீங்களா கவே இருந்தாலும் கவலையில்லை. என் உயிர் மிகக் கெட்டியானது என்று அந்தத் தேவி சொல்லி யிருக்கிறாள். முன்னம் பல தடவை என்னைக் காப் பாற்றியும் இருக்கிறாள்!'' என்றார்.

"ஐயா! அந்த இரண்டு பகைவர்கள் யார் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் பார்த்திபேந்திர பல்லவருடன் தங்களைத் தேடி வந்தவர்கள். இடிந்து விழுந்த மாளிகையில் இரண்டு உரு வங்கள் தெரிந்தன. அவர்களாகத்தான் இருக்க வேண்டும்!'' என்றான் திருமலை.

"ஐயா! வைஷ்ணவரே! இதை முன் னமேயே ஏன் சொல்லவில்லை! நீங்கள் மேலே செல்லுங்கள். நான் போய் அந்த இடிந்த வீட்டைச் சோதனை போட்டு விட்டு வருகிறேன்!'' என்று வந்தியத்தேவன் திரும்ப யத்தனித்தான்.

இளவரசர் அவனை மறுபடியும் கையைப் பிடித்து நிறுத்தி, "அவசரம் ஒன்றுமில்லை. அந்தப் பாழடைந்த வீட் டில் அவர்களைக் கண்டு பிடிக்கவும் முடி யாது. பிறகு பார்த்துக் கொள்ளலாம். நான் மறு உத்தரவு போடும் வரையில் நீர் என்னுடனேயே இருக்க வேண்டும், தெரிகிறதா? இந்தப் பாழடைந்த நகரத் தில் இன்னும் எந்த மூலை முடுக்கில் என்ன அபாயம் காத்திருக்கிறதோ, யார் கண்டது? வீர சிகாமணியே! உம்மை நம்பியல்லவா நான் வேறு யாரையும் மெய் காவலுக்கு அழைத்து வரவில்லை? இப்படி நடு வீதியில் என்னைக் கை விட்டுப் போய்விட்டால் நான் என்ன செய்வேன்?'' என்றார்.

இந்த வார்த்தைகள் வந்தியத் தேவ னைப் போதை கொள்ளச் செய்தன. அவன் நாத் தழுதழுக்க, "ஐயா! உங் களை விட்டு இனி நான் ஒரு கணமும் அகல மாட்டேன்!'' என்றான்.

ஆழ்வார்க்கடியான், "உன்னை விட்டு நானும் அகல மாட்டேன். இளவரச ருக்கு நீ காப்பு; உனக்கு நான் காப்பு" என்று சொன்னான்.

சிறிது நேரத்துக்கெல்லாம், மகா சேன சக்கரவர்த்தியின் பாழடைந்த மாளிகையின் உட்புறத்தை மூவரும் அடைந்தார்கள். விசாலமான ஓர் அறை யில் மூன்று பேருக்கும் பழைய காலத்துக் கட்டில்களில் படுக்கை விரித்திருந்தது. மூவரும் படுத்துக் கொண்டார்கள். அறையின் ஒரு பக்கத்துச் சுவரில் இருந்த பலகணியின் துவாரங்கள் வழி யாக நிலா வெளிச்சம் உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

"பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் இந்த அரண்மனையில் இதே இடத்தில் இலங்கையின் சக்கரவர்த்திகளும் இள வரசர்களும் அவர்களுடைய அந்தப்புர மாதரசிகளும் படுத்திருந்திருப்பார்கள். அப்போதும் இதே மாதிரி நிலாவின் கிர ணங்கள் இந்தப் பலகணியின் வழியாக எட்டிப் பார்த்திருக்கும். இப்போது அதே இடத்தில் நம்மைப் போன்ற சாதா ரண மனிதர்களைப் பார்த்துவிட்டு இந்த நிலாக் கிரணங்கள் ஏமாற்றமடையும். இல்லையா, வந்தியத்தேவரே!'' என்றார் அருள்மொழி வர்மர்.

"ஐயா! தங்களையும் இந்த வைஷ்ண வரையும் பற்றி நீங்கள் எது வேணு மானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். என்னை மட்டும் சாதாரண மனிதன் என்று சொல்ல வேண்டாம்!'' என்றான் வல்லவரையன்.

"மறந்துவிட்டேன்; மன்னிக்க வேண் டும். தாங்கள் பூர்வீகமான வல்லத் தரசர்கள் குலத்தில் பிறந்த அரசிளங் குமரர் அல்லவா?......"

"ஆம், ஐயா, ஆம்! என் மூதாதை ஒருவரைப் பற்றி ஒரு புலவர் பாடியிருப் பதைக் கேட்டால் இந்த வீர வைஷ் ணவர் பொறாமையினால் புழுங்கிச் செத் துப் போனாலும் போய் விடுவார்.''

"போனாலும் போகட்டும்! திருமலை நல்ல தமிழ் அபிமானி. பல்லவ குலத்து நந்திவர்மனைப் போல் தமிழ்ப் பாடலுக்காக உயிரைக் கொடுக்கவும் தயங்க மாட்டார். ஆகையால், பாடலைச் சொல்லுங்கள், கேட்கலாம்."

கொஞ்சம் தயக்கத்துடன் வல்லவரையன் பின்வரும் பாடலைக் கூறினான்:—

"என்கவிகை என்சிவிகை
என்கவசம் என்துவசம்
என்கரி மீ(து) என்பரி மீது
என்பரே—மன் கவன
மாவேந்தன் வாணன்
வரிசைப் பரிசுபெற்ற
பாவேந்தரை, வேந்தர்
பார்த்து!"

அதைக்கேட்ட பொன்னியின் செல்வர் "திருமலை, நீ தமிழ்ப் புலவனாயிற்றே! இந்தப் பாடலின் பொருள் என்ன, சொல்!" என்றார்.

"ஐயா! என்னைப் பரிசோதிக்கிறீர்கள் போலும். ஆகட்டும், இதோ சொல்லுகிறேன். மாவேந்தர் வாணரின் அரண்மனை வாசலில் சிற்றரசர்கள் பலர் இராஜ தரிசனத்துக்காக காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு இலேசில் தரிசனம் கிட்டவில்லை. ஏனெனில், பாவேந்தர்களாகிய கவிராயர்கள் முன்னமே அரண்மனைக்குள் சென்றிருந்தார்கள். அவர்களுடைய பாடல்களைக் கேட்டுவிட்டு வாணப் பேரரசர் மனமகிழ்ந்தார். அவர்களுக்குப் பரிசில்கள் கொடுத்து அனுப்பினார். பூச்சக்கரக் குடைகள், தந்தப் பல்லக்குகள், முத்துக் கவசங்கள், ரத்தினத் துவஜங்கள், யானைகள், குதிரைகள் முதலிய பல வகைப் பரிசுகள் கொடுத்து அனுப்பினார். ஆசார வாசலில் காத்திருந்த சிற்றரசர்கள் அந்தப் பரிசில்களைப் பார்த்து வயிறெரிந்து, 'அடடா! இது என் குடை அல்லவா? என் பல்லக்கு அல்லவா? என் யானை அல்லவா? என் குதிரை அல்லவா? இந்தப் பாழும் புலவர்கள் கொண்டு போகிறார்களே!' என்று புலம்பினார்கள். அந்தச் சிற்றரசர்கள் மாவேந்தர் வாணருக்குக் காணிக்கைகளாகக் கொண்டு வந்து கொடுத்திருந்த பொருள்களை வாண மன்னர் புலவர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தார். இளவரசே! பாடலுக்குப் பொருள் சரிதானே?"

"நீ சொல்லுவதில் தவறு இருக்குமா? அடாடா! என்ன அற்புதமான பாடல்! எவ்வளவு நயமான கற்பனை! இதைப் பாடிய மகாகவி யாரோ தெரியவில்லை! வாணர் குல திலகமே! வந்தியத்தேவரே! உமது மூதாதைகளின் ராஜ்யம் பெரிதோ, சிறிதோ, அதைப் பற்றிக் கவலையில்லை. இந்த மாதிரி ஒரு பாடலைப் பெற்றார்களே, அதைக் காட்டிலும் அவர்களுக்குச் சிறப்பு என்ன வேண்டும்! அவர்களுடைய குலத்திலே பிறந்த தாம் இந்த அரண்மனையில் படுக்கத் தகுந்தவர்தான்! மகாஸேனரின் கட்டில் மாத்திரம் என்ன? சாக்ஷாத் துஷ்ட கமனு சக்கரவர்த்தி படுத்திருந்த கட்டில் இப்போது கிடைக்குமானால் அதிலேயே தாம் படுக்கலாம். நீர் அதற்குத் தகுதி வாய்ந்தவர்தான்!"

"ஆமாம், ஐயா! ஆமாம்! நான் எதற்கும் தகுதி வாய்ந்தவன்தான். ஆனால் இந்த நாளில் தகுதிக்கு யார் மதிப்புக் கொடுக்கிறார்கள்? அந்த பிக்ஷுக்கள் இந்த இலங்கா ராஜ்யத்தின் கிரீடத்தை எனக்குக் கொடுத்தார்களா? வேண்டாம் என்று மறுதளிக்கக் கூடிய தங்களைப் பார்த்துத்தானே கொடுத்தார்கள்? அப்போது எனக்கு என்ன ஆத்திரம் வந்தது தெரியுமா? கிரீடத்தைத் தூக்கி என் தலையில் நானே சூட்டிக்கொண்டு விடலாமா என்று பார்த்தேன்! இந்த வீரவைஷ்ணவர் போட்டிக்கு வந்து விடுவாரே என்று சும்மா இருந்துவிட்டேன்!"

இதைக் கேட்டதும் அருள்மொழிவர்மர் கலகலவென்று உரத்துச் சிரித்தார். அந்தச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு வந்தியத்தேவன் உள்ளம் மகிழ்ந்தது. வெளிப்படையில் மேலும் கோபத்தைக் காட்டி, "சிரித்தால் மட்டும் சரியாகப் போய் விட்டதா? செய்த தவறுக்குப் பரிகாரம் என்ன?" என்றான்.

"ஐயா! வாணகுல திலகமே! சத்தியம், தர்மம் என்று சொன்னேனே! சிம்மாசனம் வேண்டாம் என்று மறுத்ததற்கு அவை சரியான காரணங்கள் என்று தங்களுக்குத் படவில்லையா?"

"சத்தியம், தர்மம் இவற்றின் பேரில் ஏற்கெனவே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் இருந்தது. இனிமேல் அவற்றின் முகத்திலேயே விழிப்பதில்லை, எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்வதில்லை என்று முடிவு செய்து விட்டேன்."

"அடாடா! ஏன்? எதற்காக அப்படிப்பட்ட முடிவு செய்தீர்? அவற்றின் பேரில் என்ன கோபம்?"

"கோபம் ஒன்றுமில்லை. சத்தியம், தர்மம் என்னும் கன்னியர் மீது தாங்கள்

காதல் கொண்டு விட்டதாகச் சொல்ல வில்லையா? அதற்காக இந்த இலங்கா ராஜ்யத்தைத் தியாகம் செய்ததாகவும் சொல்லவில்லையா? வேறொருவர் காதலித்த பெண்களை நான் மனதினாலும் நினைப்பதில்லை!''

பொன்னியின் செல்வர் மறுபடியும் கடகட வென்று சிரித்தார். "உம்மைப் போல் வேடிக்கைக்காரரை நான் பார்த்ததே இல்லை!'' என்றார்.

"ஆம், ஐயா! தங்களுக்கு வேடிக்கையாயிருக்கிறது எனக்கு வயிறு எரிகிறது. இலங்கைச் சிம்மாதனம் தங்களுக்கு வேண்டாம் என்றால், பக்கத்தில் நான் நின்றேனே, என் பக்கம் கை காட்டி 'இவனுக்குக் கொடுங்கள்!' என்று சொல்லியிருக்கக் கூடாதா?'' என்றான் வந்தியத்தேவன்.

அருள்மொழி வர்மர் சிரித்து ஓய்ந்த பிறகு, "வந்தியத் தேவரே! இராஜ்யத்தை ஏற்றுக் கொள்வது அவ்வளவு எளிய காரியமா? அதிலும் புத்த பிக்ஷுக்கள் கொடுத்து ஏற்றுக்கொள்வது சிறிதும் முறையல்ல. பின்னால் பெரிய விபரீதங்களுக்கு இடமாகும். மதத் தலைவர்கள் மத விஷயங்களுடன் நிற்க வேண்டும். மதத் தலைவர்கள் இராஜரீக காரியங்களில் தலையிட்டால் மதத்துக்கும் கேடு; இராஜ்யத்துக்கும் கேடு. மேலும் இன்று எனக்குச் சிம்மாசனம் கொடுக்க வந்த புத்த பிக்ஷுக்கள் இந்த நாட்டிலுள்ள எல்லா புத்த மதத்தாருக்கும் தலைவர்கள் அல்ல. இவர்கள் ஒரு கூட்டத்துக்குத் தலைவர்கள். இவர்களுடைய சங்கத்தைப் போல் இன்னும் இரண்டு சங்கங்கள் இருக்கின்றன. இவர்களிடம் நாம் இராஜ்யத்தை ஒப்புக் கொண்டால் இவர்களுடைய இஷ்டப்படி இராஜ்யம் ஆள வேண்டும். மற்ற இரு சங்கத்தாரும் உடனே நம் விரோதிகள் ஆவார்கள்!'' என்றார்.

"வல்லத் திளவரசருக்கு இப்போது இவ்விடத்து நிலைமை புரிந்ததா?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

"புரிந்தது, புரிந்தது! அங்கே விஷ்ணு பெரியவரா சிவன் பெரியவரா என்று சண்டை போடுகிற மூடர்களைப் போல் இங்கேயும் உண்டு என்று புரிந்தது!'' என்றான் வந்தியத்தேவன்.

"நீங்கள் இங்கே சண்டை ஆரம்பித்து விடாதீர்கள். இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. அதோ பெரஹரா ஊர்வலத்திலிருந்து ஜனங்கள் கலைந்து வரும் சத்தமும் கேட்கிறது. இனிமேல் சற்றுத் தூங்கலாம்'' என்றார் இளவரசர்.

"எனக்குத் தூக்கம் வராது. நடு வீதியில் கையைத் தட்டி அழைத்து நம்மை உயிருடன் சமாதியாகாமல் காப்பாற்றிய அம்மான் யார் என்று தெரிந்து கொண்டால்தான் தூக்கம் வரும்.''

"அவன் யார் என்பது இன்னும் எனக்கும் தெரியாது. ஆனால் அவனைப் பற்றி எனக்குத் தெரிந்த செய்திகளை வேணுமானால் சொல்லுகிறேன். கேட்க விரும்பினால் என் அருகில் வந்து உட்காருங்கள்!'' என்று சொன்னார் இளவரசர்.

## அத்தியாயம் 37

# காவேரி அம்மன்

வந்தியத் தேவனும் ஆழ்வார்க் கடியானும் ஆர்வத்துடன் எழுந்து போய் இளவரசரின் கட்டிலுக்குப் பக்கத்தில் கீழே உட்கார்ந்தார்கள். இளவரசர் பின்வருமாறு சொல்லத்தொடங்கினார்:—

"நான் சிறு பையனாயிருந்தபோது ஒரு சமயம் காவேரி நதியில் என் பெற்றோர்களுடன் படகில் போய்க் கொண்டிருந்தேன். என் தமையனும் என் தமக்கையும் கூட அச்சமயம் படகில் இருந்தார்கள். அவர்கள் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நான் மட்டும் காவேரி நதியின் நீர் சுழித்துச் சுழித்து ஓடுவதையும் அந்தச் சுழிகளில் சில சமயம் கடம்ப மலர்கள் அகப்பட்டுக் கொண்டு சுழல்வதையும் கவனித்துக் கொண்டிருந்தேன். அந்தச் சின்னஞ் சிறிய பூக்கள் அப்படிச் சுழலில் அகப்பட்டுத் தவிப்பதைப் பார்த்து எனக்கு வேதனை உண்டாகும். சில சமயம் படகின் ஓரமாகக் குனிந்து தவிக்கும் கடம்ப மலர்களை நீர்ச் சுழல்களிலிருந்து எடுத்து விடுவேன். அப்படி எடுத்து விட்ட ஒரு சமயத்தில் தவறித் தண்ணீரில் விழுந்து விட்டேன்! தலை குப்புற விழுந்தபடியால் திணறித் திண்டாடிப் போனேன்!

"காவேரியின் அடி மணலில் என் தலை இடித்த உணர்ச்சி இப்போதும் என் நினைவில் இருக்கிறது. பிறகு வேகமாக ஓடிய தண்ணீர் என்னை அடித்துத்

தள்ளிக்கொண்டு போனதும் நினைவிருக்கிறது. எங்கேயோ வெகு தூரத்தில் பலருடைய கூக்குரல்களின் சத்தம் கேட்பதுபோ லிருந்தது. மூச்சுத் திணறத் தொடங்கியது. சரி, காவேரி நதி நம்மைக் கடலில் கொண்டுபோய்த் தள்ளிவிடப் போகிறது என்று நினைத்துக் கொண்டேன். பெற்றோர்களும் தமக்கையும் தமையனும் நம்மைக் காணாமல் எவ்வளவு துன்பப்படுவார்கள் என்ற நினைவும் உண்டாயிற்று. அந்தச் சமயத்தில் யாரோ என்னை இரு கைகளாலும் வாரி அணைத்து எடுத்தது போலிருந்தது. அடுத்த கணத்தில் தண்ணீருக்கு மேலே வந்து விட்டேன். தலை, கண், மூக்கு, வாய் எல்லாவற்றி லிருந்தும் தண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. ஆயினும் என்னை வாரி எடுத்துக் காப்பாற்றிய கைகள் என் கண்ணுக்குத் தெரிந்தன. பிறகு அந்தக் கரங்களுக் குரியவரின் முகத்தையும் பார்த்தேன். சில கண நேரந்தான் என்றாலும், அந்த முகம் என் மனதில் பதிந்து விட்டது. இதற்கு முன் எப்போதோ பார்த்த முகமாகவும் தோன்றியது. ஆனால் இன்னார் என்பதாகத் தெரியவில்லை.

"பின்னர் அந்தக் கைகள் வேறு யாரிடமோ என்னைக் கொடுத்தன. மறு கணம் நான் படகில் இருந்தேன். தாய் தந்தை, தமக்கை, தமையன் எல்லாரும் என்னைச் சுற்றிக் கொண்டார்கள். அவர்களுடைய துயரமும், பரிவும், அன்பும், ஆதரவும் என் கவனத்தை முழுதும் கவர்ந்து விட்டன. சிறிது நேரத்திற்குப் பிறகு என்னைத் தண்ணீரிலிருந்து எடுத்துக் காப்பாற்றியது யார் என்பதைப் பற்றிக் கேள்வி எழுந்தது. ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டார்கள். என்னையும் கேட்டார்கள். நானும் சுற்று முற்றும் பார்த்தேன். அந்தத் தெய்விகமான முகத்தை எங்கும் காணவில்லை. ஆகையால் கேள்விக்கு மறுமொழி சொல்ல முடியாமல் விழித்தேன். கடைசியில் எல்லாருமாகச் சேர்ந்து காவேரி அம்மன்தான் என்னைக் காப்பாற்றி யிருக்க வேண்டும் என்று தீர்மானித்தார்கள். நான் நதியில் விழுந்து பிழைத்த தினத்தில் ஆண்டுதோறும் காவேரி அம்மனுக்குப் பூஜை போடவும் ஏற்பாடு செய்தார்கள். ஆனால் என் மனதில் மட்டும் திருப்தி ஏற்படவில்லை. என்னைக் காப்பாற்றியது காவேரி அம்மனாயிருந்தாலும் சரி, வேறு மானிட ஸ்திரீயாயிருந்தாலும், என் மனதில் பதிந்திருந்த அவளுடைய திரு முகத்தை இன்னொரு தடவை தரிசிக்க வேண்டும் என்ற தாபம் என் மனதில் குடிகொண்டு விட்டது. காவேரி நதிப் பக்கம் போகும்போதெல்லாம் திடீரென்று அத் தேவி நீரிலிருந்து எழுந்து எனக்குத் தரிசனம் தரமாட்டாளா என்ற ஆசையுடன் அங்குமிங்கும் பார்ப்பேன். நாளாக ஆக, அவள் ஒரு மானிட ஸ்திரீயாகவே இருக்கலாம் என்ற எண்ணம் வலுப்பட்டது. ஆகையால் எந்தத் திரு விழாவுக்குப் போனாலும் அங்கே கூடியுள்ள மூதாட்டிகளின் முகங்களையெல்லாம் நான் ஆர்வத்தோடு உற்றுப் பார்ப்பது வழக்கம். சில காலத்துக்குப் பிறகு அப்படிப் பார்ப்பது அவ்வளவு நல்ல வழக்கமன்று என்பதை உணர்ந்தேன். வருஷம் ஆக ஆக, மறுபடியும் அந்தத் தெய்வ முகத்தைத் தரிசிக்கலாம் என்ற ஆசையை இழந்து விட்டேன்.

"சுமார் ஒரு வருஷத்துக்கு முன்னால் நமது தென் திசைப் படைகளின் மாதண்ட நாயகனாகி நான் இங்கு வந்து சேர்ந்தேன். அதற்கு முன்பே சேநாபதி பூதிவிக்கிரம கேசரி இலங்கையில் பல பகுதிகளைப் பிடித்திருந்தார். இந்த அநுராதபுரம் பல தடவை கைமாறி அப்போது மறுபடியும் மகிந்தன் படைகளின் வசத்தில் இருந்தது. இந்நகரை நம் வீரர்கள் முற்றுகை யிட்டிருந்தார்கள். முற்றுகை நடந்து கொண்டிருந்த சமயத்தில் நான் இலங்கையின் பல பகுதிகளையும் பார்த்துத் தெரிந்து கொள்ள விரும்பினேன். பொறுக்கி எடுத்த ஆயிரம் வீரர்களை என்னுடன் சேநாபதி அனுப்பி வைத்தார். நம் சைன்யத்தின் வசப்பட்டிருந்த எல்லாப் பகுதிகளுக்கும், காடு, மேடு, மலை, நதி ஒன்றும் விடாமல் போய், அந்தந்தப் பிரதேசங்களின் இயல்பை நன்கு தெரிந்துகொண்டு வந்தேன். இந்த இலங்கைத் தீவையொட்டிக் கடலில் பல சிறிய தீவுகள் உண்டு என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். அந்தத் தீவுகளுக்கும் போய்ப் பார்த்து வந்தேன். இப்படிச் சுற்றி வருகையில் ஒருசமயம் இந்த நகரத்துக்கு வடக்கே சில காத தூரத்தில் காட்டின் மத்தியில் தாவடி போட்டுக்கொண்டு தங்கி யிருந்தோம். நாங்கள் தங்கியிருந்த இடத்தின் பக்கத்தில் 'யானை இறவு'த்துறை இருந்தது. அங்கே இலங்கைக்குக் கிழக்கேயுள்ள கடலும் மேற்கேயுள்ள கடலும் மிக நெருங்கி வந்து ஒரு குறுகிய கால்வாயின் மூலம் ஒன்று சேருகின்றன. அந்தத்

துறையின் வழியாகச் சில சமயம் யானை மந்தைகள் இலங்கையின் வட பகுதிக்குச் செல்லுவது வழக்கமாம். ஆகையால் அந்த இடத்துக்கு 'யானை இறவு' என்று பெயர் வந்ததாகச் சொல்லுகிறார்கள். நாங்கள் அங்கே தங்கியிருந்த சமயத்தில் ஒரு விசித்திரமான சம்பவம் நிகழ்ந்தது. இரவு நேரங்களில் தாவடிக்குச் சமீபத்தில் ஒரு புலம்பல் குரல் கேட்டது. அது மனிதக் குரலா, பட்சியின் குரலா, விலங்கின் குரலா என்று முதலில் தெரியவில்லை. கேட்பவர்கள் ரோமம் சிலிர்க்கும்படியான சோகம் அதில் தொனித்தது. முதலில், தாவடியின் ஓரத்தில் இருந்த வீரர்கள் காதில் விழுந்தது. அதை அவர்கள் பொருட்படுத்தாமல் இருந்தார்கள். பிறகு, பாசறையைச் சுற்றிலும் பல இடங்களிலும் கேட்டது. என்னிடத்திலும் சிலர் வந்து சொன்னார்கள். நான் அதை இலட்சியம் செய்யவில்லை. 'பேய் பிசாசு என்று பயப்படுகிறீர்களா? அப்படியானால் ஊருக்குத் திரும்பிப் போய் அம்மா மடியில் பயமின்றிப் படுத்துத் தூங்குங்கள்!' என்றேன். இதனால் அவர்களுக்கு ரோசம் வந்துவிட்டது. அப்படி ஓலமிடுகிற குரல் மனிதக் குரலா, விலங்கின் குரலா அல்லது பிசாசின் குரலா என்று தெரிந்து கொள்ளத் தீர்மானித்தார்கள். ஓலம் வந்த இடத்தை நோக்கி ஓடிப் போய்ப் பார்த்தார்கள். அவர்கள் அருகில் நெருங்கியதும் அந்தக் குரலுக்குரிய உருவம் ஓடத் தொடங்கியது. அது ஒரு பெண்ணின் உருவம் போலத் தோன்றியது. ஆனால் அந்த உருவத்தை இவர்களால் பிடிக்க முடியவில்லை. அதற்குப் பிறகும் அந்த ஓலம் நிற்காமல் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தது.

"முதலில் அதை நான் இலட்சியம் செய்யாமல்தானிருந்தேன். ஆனால் என்னுடைய வீரர்களுக்கு இதைத் தவிர வேறு பேச்சே இல்லாமற் போய் விட்டது. உண்மையிலேயே சிலர் பயப் பிராந்தி கொண்டு விட்டார்கள். அதன் பேரில் மர்மம் இன்னதென்பதைக் கண்டறியத் தீர்மானித்தேன். ஒரு நாள் இரவு அந்த ஓலம் வந்த திசையை நோக்கி நானும் சில வீரர்களும் சென்றோம். புதர் மறைவிலிருந்து ஒரு ஸ்திரீ உருவம் வெளிப்பட்டது. ஒரு கண நேரம் எங்



களைப் பார்த்து விட்டுத் திகைத்து நின்றது. மறுபடி ஓடத் தொடங்கியது. எல்லாருமாகத் துரத்திச் சென்றால் அந்த உருவத்தைப் பிடிக்க முடியாது என்று என் மனதிற்குள் ஒரு குரல் கூறியது. எனவே, மற்றவர்களை 'நில்லுங்கள்' என்று சொல்லி நிறுத்தி விட்டு, நான் மட்டும் தொடர்ந்து ஓடினேன். ஒரு தடவை அந்த உருவம் திரும்பிப் பார்த்தது. தனி ஆளாக நான் வருவதைப் பார்த்து என்னை வரவேற்கும் பாவனையில் காத்துக் கொண்டிருந்தது. இப்போது எனக்கும் திகிலாகத்தான் போய் விட்டது. ஒரு வினாடி நேரம் தயங்கி நின்றேன். மறுபடி நெஞ்சை உறுதிப் படுத்திக் கொண்டு முன்னால் சென்று அந்தப் பெண் உருவத்தை நெருங்கினேன். நிலா வெளிச்சம் அவள் முகத்தில் நன்றாக விழுந்தது. தெய்விகமான அம் முகத்தில் புன்னகை அரும்பியிருந்தது. அந்தக் கணத்தில் எனக்கு நினைவு வந்து விட்டது. காவேரி அம்மன் இவள்தான்! என்னை வெள்ளம் அடித்துப் போகாமல் எடுத்துக் காப்பாற்றிய தெய்வ மங்கை இவள்தான்!...... சற்றுநேரம் பிரமை பிடித்தவன் போல் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு 'தாயே! நீ யார்! இங்கே எப்போது வந்தாய்? எதற்காக வந்தாய்? உன்னை எத்தனையோ காலமாக நான் தேடிக் கொண்டிருந்தேனே? என்னைப் பார்க்க விரும்பினால் நேரே என்னிடம் வருவதற்கென்ன? இந்தத் தாவடியைச் சுற்றி ஏன் வட்டமிடுகிறாய்? ஏன் புலம்புகிறாய்?' என்று அலறினேன். அந்த மாதரசி மறு மொழி சொல்லவில்லை. மீண்டும் மீண்டும் நான் கேட்டும் பயனில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுடைய கண்களில் கண்ணீர் பெருகத் தொடங்கியது. அந்தக் கண்ணீர் என் நெஞ்சைப் பிளந்தது. அவள் ஏதோ சொல்ல முயற்சித்தாள் என்று தோன்றியது. ஆனால் வார்த்தை ஒன்றும் வரவில்லை. உருத்தெரியாத சப்தம் ஏதோ அவள் தொண்டையிலிருந்து வந்தது. அப்போது சட்டென்று எனக்குத் தெரிந்து விட்டது. அவள் பேசும் சக்தியில்லாத ஊமை என்று. அப்போது நான் அடைந்த வேதனையைப் போல் என்றும் அடைந்ததில்லை. இன்னது செய்வதென்று தெரியாமல் நான் செயலற்று நின்றேன். அந்த ஸ்திரீ சட்டென்று என்னைக் கட்டித் தழுவி உச்சி மோந்தாள். அவள் கண்ணீர்த் துளிகள் என்



தலையில் விழுந்தன. உடனே, அடுத்த கணத்திலேயே, என்னை விட்டு விட்டு ஓடினாள். திரும்பிப் பார்க்கவும் இல்லை. நானும் அவளைத் தொடர்ந்து செல்ல முயலவில்லை பாசறைக்குச் சென்றதும் என்னை ஆவலோடு சூழ்ந்து கொண்டு கேட்ட வீரர்களிடம், 'அவள் பேயும் அல்ல, பிசாசும் அல்ல; சாதாரண ஸ்திரீதான்! வாழ்க்கையில் ஏதோ பெருந் துயரத்தினால் சித்தப் பிரமை கொண்டிருக்கிறாள். மறுபடியும் அவள் வந்தால் அவளைத் தொடர்ந்து போய்த் தொந்

தாவு செய்யாதீர்கள்!' என்று கண்டிப்பாகக் கட்டளையிட்டேன்.

"மறுநாள் முழுதும் அங்கிருந்து தாவடியைக் கிளப்பிக் கொண்டு போய் விடலாமா என்ற யோசனை அடிக்கடி எனக்குத் தோன்றி வந்தது. ஆனாலும் முடிவு செய்யக் கூடவில்லை. ஒரு வேளை மறுபடியும் அந்த ஸ்திரீ வரக்கூடும் என்ற ஆசை மனதிற்குள் இருந்தது. இத்தகைய யோசனையிலேயே பொழுதும் போய் விட்டது. இரவு வந்தது. நான் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. தாவடிக்கு அருகில் அந்த ஓலக் குரல் கேட்டது. நான் மற்ற வீரர்களிடம் என்னைப் பின் தொடர்ந்து வர வேண்டாம் என்று சொல்லி விட்டுக் குரல் கேட்ட இடத்தை நோக்கிப் போனேன். அந்தப் பெண்ணரசி என்னை முதல் நாள் மாதிரியே புன்னகையுடன் வரவேற்றாள். சிறிது நேரம் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஏதோ சொல்ல முயன்றாள். எனக்கு விளங்கவில்லை.

பிறகு என் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போனாள். அவளுடன் போவதற்கு எனக்குக் கொஞ்சம் கூடத் தயக்கம் உண்டாகவில்லை. காட்டு வழியில் போகும்போது முள் செடிகளின் கிளைகள் என் மீது படாத வண்ணம் அவள் விலக்கி விட்டுக் கொண்டு போனது என் நெஞ்சை உருக்கியது. கொஞ்ச தூரம் போன பிறகு ஒரு குடிசை தென்பட்டது. அந்தக் குடிசைக்குள் ஒரு அகல் விளக்கு மினுக்கு மினுக்கு என்று எரிந்தது. அந்த வெளிச்சத்தில் அங்கே படுத்திருந்த கிழவன் ஒருவனைக் கண்டேன். அவன் நோயாகப் படுத்திருந்தான் என்பதைத் தெரிந்து கொண்டேன். அவன் உடம்பெல்லாம் பொறுக்க முடியாத குளிரினால் நடுங்குவது போல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் உடம்பையே சில சமயம் தூக்கித் தூக்கிப் போட்டது. பற்கள் கிட்டிப் போயிருந்தன, கண்கள் சிவந்து தணல்களைப் போல் அனல்வீசின. ஏதேதோ உருத் தெரியாத வார்த்தைகளை அவன் பிதற்றிக் கொண்டிருந்தான்......

"உங்களுக்கு நினைவில் இருக்கிறதா? இன்று பாதாளக் குகையில் நாம் பார்த்த மகாபோதி விஹாரத்தில் ஒரு பிக்ஷு நடுங்கிக் கொண்டிருந்தாரல்லவா? அவர் பேரில் தேவர்கள் ஆவிர்ப்பவித்திருந்ததாகச் சொன்னார்கள் அல்லவா? அப்போது எனக்குக் காட்டின் மத்தியில் குடிசையில் பார்த்த கிழவன் ஞாபகம் வந்தது. அந்தப் பிக்ஷுவின் பேரில் தேவர்கள் ஆவிர்ப்பவித்திருக்கிறார்களா அல்லது நடுக்கு சுரம் என்னும் கொடிய நோய் ஆவிர்ப்பவித்திருக்கிறதா என்ற சந்தேகம் ஏற்பட்டது. அதைப்பற்றி நான் பிரஸ்தாபிக்கவில்லை. ஏன் பிரஸ்தாபிக்க வேண்டும்! ஏன் அந்தப் பக்திமான்களின் நம்பிக்கையைக் கெடுக்க வேண்டும்? இந்த வருஷத்தில் இந்தப் பெரஹராத் திருவிழா நடப்பதற்கு அநுமதி கொடுத்தேனே, ஒரு விதத்தில் பெரிய தவறு செய்து விட்டேன் என்று தோன்றுகிறது. ஏற்கெனவே பாதிக்கு மேல் அழிந்து போயிருக்கும் இந்தப் புராதன நகரத்திற்குக் குளிர் காய்ச்சலும் வந்துவிட்டால் என்ன கதி ஆவது? மிச்சமிருக்கும் ஜனங்களும் இங்கிருந்து ஓடவேண்டியதுதான்......"

இவ்வாறு சொல்லி அருள்மொழிவர்மர் ஏதோ யோசனையில் ஆழ்ந்தார்.

சற்றுப் பொறுத்துப் பார்த்துவிட்டு வந்தியத்தேவன் "ஐயா! இந்த நகரம் எப்படியாவது போகட்டும். குடிசையில் பிறகு என்ன நடந்தது? சொல்லுங்கள்!" என்றான்.

"குடிசையில் ஒன்றும் நடக்கவில்லை. அந்த மாதரசி நான் அதிக நேரம் அங்கு நிற்கக்கூடாது என்று கருதினாள் போலிருக்கிறது. உடனே என் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வெளியில் வந்துவிட்டாள். பிறகு, சில சமிக்ஞைகள் மூலம் தான் சொல்ல விரும்பியதைச் சொன்னாள். அவள் சொல்ல விரும்பியது என்னவென்பதை என் மனம் தெரிந்து கொண்டு விட்டது. 'இந்தப் பிரதேசத்தில் இருக்க வேண்டாம். இங்கே இருந்தால் இந்தக் குளிர் காய்ச்சல் நோய் வந்துவிடும். உடனே இங்கிருந்து தாவடியைப் பெயர்த்துக் கொண்டு போய்விடு!' என்று அவள் சமிக்ஞைகளின் மூலமாகச் சொல்லி, என்னையும் தெரிந்து கொள்ளச் செய்து விட்டாள். என் பேரில் அவளுக்குள்ள அளவில்லாத அன்பின் காரணமாகவே இந்த எச்சரிக்கை செய்ததாகவும் அறிந்து கொண்டேன். தெய்வத்தின் எச்சரிக்கையாகவே அதை எடுத்துக் கொண்டு அன்றிரவே தாவடியை அங்கிருந்து கிளப்பும்படி கட்டளையிட்டேன். என்னுடனிருந்த வீரர்களுக்கும் அது மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. அந்தப் பயங்கரமான ஓலக் குரலை இனிக் கேட்க வேண்டாம் என்று எண்ணி அவர்கள் உற்சாகமடைந்தார்கள்......"

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 323. புகழுக்கும் இறுதி உண்டோ!

இயற்கையானது சிற்சில அற்புத வேகங்களை வைத்து உயிர் வர்க்கத்தை ஓட்டிக்கொண்டுவந்திருக்கிறது. அந்த வேகங்கள் சிருஷ்டி தத்துவத்திற்கு அடிப்படையான கருவிகள் என்று கூடச் சொல்ல வேண்டும்.

சேவல் போர் ஒன்றைப் பார்த்தால் போதும். என்ன ஆவேசத்தோடும் வெறியோடும் ஒவ்வொரு சேவலும் போர் புரிகிறது என்பதை எளிதில் அறியலாம். தன் உயிர் அதற்கு ஒரு பொருட்டே அல்ல. வீரம் என்ற ஒரு தத்துவத்திற்குத் தன்னிடத்திலுள்ள சக்தியை யெல்லாம் அர்ப்பணம் பண்ணுகிறது. உயிரையே அர்ப்பணம் பண்ணுகிறது சேவல்.

சேவலின் உடல் மறைகிறது. உயிர் மறைகிறது. ஆனால் அவைகளுக்குள் அசையாது நிற்கும் வீரம் மாத்திரம் பிரகாசிக்கும். சேவல் போரைப் பார்த்தவர்களுக்குத் தான் இந்த உண்மை தெரியவரும்.

இந்த வீர தத்துவமே சேவல் இனத்தை வளர்த்துக் காப்பாற்றி வந்திருக்கிறது. சேவலின் காரியம் அப்படி நிற்கட்டும்.

மனுஷ வர்க்கத்தையும் வளர்த்துக் காப்பாற்றி வந்திருக்கிறது வீர தத்துவம் என்றால் மிகையல்ல.

* * *

பார்த்தோம்: சீதை மேலுள்ள ஆசையை விட்டுவிடும்படி இந்திரஜித்து ராவணனிடம் நயந்து சொன்னான். அரக்கர் குலம் பிழைக்கும் சீதையை விட்டு விட்டால் என்று சொன்னான்.

வந்து விட்டது கோபம் ராவணனுக்கு. "ஆம்; அரக்க வீரர்கள் ஏதோ சாதித்து விடுவார்கள் என்று நான் எண்ணவில்லை; நீ தான் சாதித்து விடப் போகிறாய் என்றும் எண்ணவில்லை. பகைவரைத் தீர்ப்பது என்னால் ஆகிற காரியமே ஒழிய வேறு அல்ல என்பதைத் தெரிந்தே பகையை மூட்டிக் கொண்டேன்" என்று சொன்னான் ராவணன்.

ராவணனிடத்தில் உள்ளாகக் கிடக்கும் வீரம் அவனை இன்னும் எப்படி யெல்லாம் ஆட்டுகிறது என்பதைப் பார்க்கலாம்:

இந்திரஜித்தைப் பார்த்துச் சொல்லுகிறான்: "நீ சொன்னதெல்லாம் வெறும் பைத்தியக்கார விஷயம். உலகம் அழிந்தாலும் அழியாத இதிகாசம் ஒன்று என்னுடைய புகழோடு நிலைபெறப் போகிறது. தேவர்களும் காணுவார்கள். எதை: நீரில் உண்டாகிற குமிழி போன்ற நிலையில்லாத இந்த உடலை விடத்தான் போகிறேன். அதுதான் இதிகாசம். அதைத் தான் தேவர்கள் காணப் போகிறார்கள்."

"பேதைமை உரைத்தாய்,மைந் த;
உலகெலாம் பெயரப்பே ராக்
காதைஎன் புகழினோ டு
நிலைபெற, அமரர்கா ண,
மீதெழு மொக்குள்அன் ன,
யாக்கையை விடுவதல் லால்,
சீதையை விடுவதுண் டோ,
இருபது திண்தோளுண் டாய்."

[மீதெழு மொக்குள் அன்ன யாக்கையை: நீரின் மேல் எழும் குமிழி போன்ற நிலையில்லா யாக்கையை.

குறிப்பு:—'இருபது திண்தோள் உண்டாய்' என்று முடிக்கிறதில் உள்ள வேகம் தனி; ராவணன் நம் முன் வந்து நிற்கிறான்.

'இருபது தோள்' என்றது இரண்டு தோளின் சக்தியை எடுத்துக் காட்ட வந்த அடையாளச் சொற்றொடர்தான்.]

* * *

"போரில் நான் வெல்லவில்லை என்று வைத்துக் கொள். வேதமும் வேதத்திலுள்ள உண்மைகளும் என்றென்றும் நிற்கும் வரை என் புகழும் நிற்கத்தான் செய்யும். அந்த ராமனுடைய பெயர் நிற்குமானால் என் பெயரும் நிற்கத்தானே வேண்டும்?"

வென்றிலென் என்றபோ தும்,—
வேதமுள் ளளவும்,யா னும்
நின்றுளென் அன்றோமற் றவ்
இராமன் பேர் நிற்குமா யின்;—
பொன்றுதல் ஒருகாலத் தும்
தவிருமோ, பொதுமைத்தன் றோ;
இன்றுளார் நாளைமாள் வர்;—
புகழுக்கும் இறுதியுண் டோ

[பொன்றுதல் ஒருகாலத்தும் தவிருமோ பொதுமைத் தன்றோ: இறக்கிற காரியத்தை என்றைக் காவது தவிர்க்க முடியுமா! சாதாரணமாகத் தினமும் பார்க்கிற காரியமே அல்லவா அது?]

இந்த வார்த்தைகளை யெல்லாம் ராவணன் பேசுவதாக வைக்க வேண்டாம். அவனுக்கு உள்ளாக இருந்து அவனை ஆட்டுகின்ற அனாதியான வீர தத்துவமே பேசுகிறது என்று சொல்லலாம். உடைமை, உடல், உயிர் ஒன்றும் பொருட்டல்ல. வீரம் ஒன்றே அவனுக்கு லக்ஷ்யமாய் முன் நிற்கிறது. ஆம், அனாதியான வஸ்துத்தான் வீரம்.

# நதிக்கரையிலே!



மூலக் கதை: குஜராத்தி

எழுதியவர்: ஸ்ரீ பன்னாலால் பட்டேல் மொழிபெயர்ப்பு: எஸ். வி. எஸ்.

அந்தி நேரம்; செவ்வானம் படர்ந்திருந்தது. வர்தாக் நதி கூட செம்பஞ்சுக் குழம்பு ஓடுவது போல் தோற்ற மளித்தது. நதியின் வலது புறத்துக் குன்றின் மீதிருந்த வீட்டின் ஓடுகள் தங்கத் தகடென மின்னின. எதிர்க் கரையில் நீண்டு பரவிக் கிடந்த சம வெளியில் பறந்து கொண்டிருந்த தூசி கூடச் செக்கிறமாக இருந்தது. கார்த்திகை மாதத்துக் குளிர்கூட, இந்த அந்தி தந்த இன்பத்தில் மனோரம்யமாக இருந்தது.

இவ்விதம் நிலவிய அமைதியைக் கலந்த சத்தம் ஆடுமாடுகளின் சத்தம்தான். அவை அந்தக் குன்றின் சரிவில் பகல் எல்லாம் மேய்ந்து விட்டுப் பட்டியை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. அவற்றை இருபத்தெட்டுப் பிராயமுற்ற ஒரு இள மங்கை ஓட்டிச் சென்று கொண்டிருந்தாள். அவள் ஆடுகளைப் பட்டியில் அடைத்து விட்டு, மாடுகளைத் தொழுவத்தில் கட்டியபின் தன் வீட்டுக்குள் நுழைந்து, திரும்பிக் கதவைச் சாத்தலானாள். அப்பொழுது அவளுடைய கண்களுக்கு நதிக்கரையில் ஏதோ தென்பட்டது.

ஆம்; அங்கே கொஞ்சம் நெருப்புத் தென்பட்டது. அந்த மங்கலான தீயின் ஒளியில் யாரோ இரு சந்நியாசிகள் காஷாயம் தரித்து ஜடாமுடிதாரிகளாக விளங்குவது தெரிந்தது. அவர்களில் ஒருவன் நதியிலிருந்து ஒரு பானையில் தண்ணீர் மொண்டு எடுத்து வருவது தெரிந்தது. அவன் சற்றுக் கெந்திக் கெந்தி நடந்தான். ஒரு வேளை அவன் நொண்டி போலும். மற்றவன் நெருப்பில் இன்னும் சில சுள்ளிகள் போட்டு நெருப்பைத் தூண்டிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது அந்தப் பெண்மணியின் அத்தைப் பாட்டி, "என்ன பார்க்கிறாய், நவல்! ஏதாகிலும் பசுமாட்டைப் பார்த்துக் கொண்டு நிற்கிறாயா!" என்று கேட்டாள். பிறகு அவளும் அந்தத் துறவிகளைப் பார்த்துக் கொண்டு நின்று விட்டாள்.

"ஒன்றுமில்லை. இந்த அயோக்கியர்கள் போயும் போயும் தங்குவதற்கு இந்த இடத்தை ஏன் தேர்ந்தெடுத்தார்கள் என்றுதான் பார்க்கிறேன்" என்றாள் நவல். சற்று அலட்சியமாகத்தான இதைக் கூறினாள் என்றாலும் அவளுடைய முகத்தில் நிமிஷத்துக்கு நிமிஷம் கவலைக்குறி அதி வேகமாகப் படரலாயிற்று.

கிழவி முணு முணுக்க ஆரம்பித்து விட்டாள். "நாம் ஏன் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும். அவனவன் விதிப்படிதான் எதுவும் நடக்கும். போனவருஷம்தான் அந்தப் பாம்பாட்டியைப் போலீஸ்காரர்கள் இதே இடத்தில் பிடித்தார்கள். இது இந்த மடையர்களுக்குத் தெரியாதோ என்னவோ! என்ன இருந்தால் என்ன, சென்ற மூன்று வருஷங்களாக போலீஸ்காரர்கள் இந்த வீட்டின் மீது ஒரு கண் வைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறார்கள்."

இதை நவல் கேட்டிருந்தாளானால் சிரித்துக் கொண்டே, "அத்தை! முன்பின் தெரியாத இந்த சந்நியாசிகளுக்கு, இந்த வீட்டிலிருந்த ஒரே ஒரு ஆண் பிள்ளை ஊர் பெருதனக்காரர் மகனைக் கொன்று விட்டு ஓடிப் போய் விட்டார் என்பது எப்படித் தெரியும்!" என்று கேட்டிருப்பாள். ஆனால் அவள்தான் கேட்கவில்லையே! அவள் சிந்தனை முழுதும்தான் அந்தச் சந்நியாசிகளை உற்றுக் கவனிப்பதிலேயே ஈடுபட்டிருக்கிறதே! வெளிக்கு மட்டும் ஏதோ வேலை செய்வது போல் காட்டிக் கொள்வதற்காக, தொழுவத்திலிருந்த சாணியையெல்லாம் எடுத்துப் பெருக்கிக் கொண்டிருந்தாள்.

கிழ அத்தை இப்போது நன்றாகக் காதில் விழும் படியாகவே முணு முணுக்கத் தொடங்கி விட்டாள்:

"அவன் ஓடிப் போய்த் தப்பித்துக் கொண்டது என்னமோ நல்ல காரியம்தான். ஆனாலும் பிறந்தவளுக்கு இடைஞ்சல்கள் இல்லாதிருக்கும் பொருட்டு அவன் வந்து போலீஸ்காரர்களிடம் தன்னை ஒப்படைத்திருக்கவேண்டும். ஆம்; இந்தப் பேதைப் பெண்தான் எத்தனை நாள் அவனுக்காகக் காத்துக் கொண்டிருப்பாள்! இதையும் அவன் நினைத்துப் பார்த்திருக்க வேண்டும்."

அத்தையின் பேச்சு எப்பொழுதுமே ஒன்றுக் கொன்று சம்பந்தமில்லாமல் இருக்கும்; காரண காரிய

தொடர்பில்லாமலிருக்கும். அவள், நவலிடம் ஒரு கூடையில் பருத்திக் கொட்டை போட்டுக் கொடுத்து, "இதைச் சந்து (எருமையின் பெயர்) வுக்கு வை. அந்த அயோக்கியர்கள் எங்கேயாவது இருக்கட்டும்: ஏதாவதும் செய்து கொள்ளட்டும்; அதைப்பற்றி நமக்கென்ன கவலை!" என்றாள்.

நவல், "அத்தை! அவர்கள் நம்மைப் பற்றித்தான் பேசுகிறார்கள் போலிருக்கிறதே! கொஞ்சம் பாரேன்! அவர்கள் இந்த வீட்டையே பார்த்துக் கொண்டு பேசுவதைக் கவனியேன்" என்று சொல்ல விரும்பினாள்.

ஆனால் இதெல்லாம் தன் அத்தையிடம் சொல்வதற்கு அவளுக்குத் தைரியம் போதாது. அப்படிச் சொல்லியிருந்தாலும் பிரமாத பிரயோசனம் ஒன்றும் ஏற்பட்டிராது.

ஆகவே, நவல் எருமைக்கு அந்தத் தீனியைக் கொடுத்து விட்டு, தான் முன்பு நின்று பார்த்துக்கொண்டிருந்த மூலைக்கு வந்து நின்று விட்டாள். ஆம், அவள் கவனம் முழுதும் அவ்விருவர்களைக் கவனிப்பதிலேயே ஈடுபட்டிருந்தது.

"மாமாவைப் போய், அவர்களை யார் இன்னார் என்று விசாரித்துக் கொண்டு வரச் சொல்லியிருக்க வேண்டும். இந்த ஊரில் தங்குவதற்கு எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. எதிரே அம்மன் கோவிலிருக்கிறது. அதன் பிராகாரத்தில் தங்கலாம். ஏன், இந்த ஊர் முழுவதிலும் எங்கு வேண்டுமானாலும் தங்கலாமே. இருந்தும் இந்த அயோக்கியர்கள், என்னைத் துன்புறுத்துவதற்கென்றே, என் மன அமைதியைக் கெடுப்பதற்கென்றே இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் போல் அல்லவா தோன்றுகிறது. அது ஏன்! ஒருவேளை இவர்கள் போலீஸ் துப்பறிவாளர்களோ!" இப்படி என்னவெல்லாமோ நினைத்துக் கொண்டே நின்றிருந்தாள்.

இதற்குள் ஐம்பது பிராயமுள்ள அவளுடைய மாமா, இரண்டு பெரிய காளை மாடுகளைப் பற்றிக் கொண்டு வந்தார். அவரைப் பார்த்ததும் நவல், "மாமா, அதோ பாருங்கள்! யாரோ புது மனிதர்கள் ராத்திரி அங்கே தங்க வந்திருக்கிறார்கள்போல் தோன்றுகிறது" என்றாள்.

"வந்து தங்கினால் தங்கிவிட்டுப் போகிறார்கள். அதைப் பற்றி நமக்கென்ன!" என்று சொல்லிக் கொண்டே தொழுவத்துக்குப் போனார்.

நவல் சிந்தித்தபடியே இருந்தாள். அவள் சிந்தனை போகிற போக்கைப் பார்த்து அவளே ஆச்சரியமுற்றாள். ஏன், தன் மனம் இப்படி அந்தக் கொலைகாரனை நினைத்து ஏங்குகிறது. அதுவும் மூன்று ஆண்டுகள் ஆன பிறகும் அவன் நினைவு நீங்கவில்லையே! அவனுக்காக மட்டும் அவள் உள்ளம் ஏங்கவில்லை; மற்றவனுக்காகவும், அதாவது இன்னொரு கணவன், இந்த வீட்டிலிருந்து எட்டு வருஷங்களுக்கு முன்பு திருடிக்கொண்டு ஓடினானே, அவனுக்காகவும் உள்ளம் ஏங்குகிறது. இந்த மாதிரி ஏக்கம் இதற்கு முன்பு அவளுக்கு எப்பொழுதும் ஏற்பட்டது கிடையாது. ஆனால் இப்பொழுது, தூரத்தில் அந்தச் சந்நியாசிகளைக் காணும்போது, ஏன் உள்ளம் பொருமுகிறது; அவர்களைப் பற்றி ஏன் நினைக்கிறது! அது மட்டுமல்ல, அவள் ஒருமாதிரி தீர்மானம் கூடச் செய்து கொண்டு விட்டாள். இடைக்காத்திரமாக விளங்குபவன் தன் முதல் கணவனாக இருக்கவேண்டும் என்றும், நொண்டி நொண்டி நடப்பவன் தனது இரண்டாம் கணவனான கொலைகாரனாகத்தான் இருக்க வேண்டும் என்று நிச்சயம் செய்துவிட்டாள்.



இருள் சூழ்ந்து வந்த அந்த நேரத்தில் அவ்விருவரும் தன் வீட்டை நோக்கி வருவதைப் பார்த்தாள். உடனே எழுந்திருந்து கொஞ்ச நேரம் வாசலில் வந்து நின்று அவர்கள் வருகிறார்களா என்று பார்த்து விட்டு உள்ளே போனாள்.

நவல் இருபத்தெட்டு வயது வாழ்ந்திருக்கிறாள். இத்தனை நாள் வாழ்க்கையில் முதல் தடவையாக பயம் என்றால் என்ன என்பதை உணர்ந்தாள். இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. அவள் தன்னைத்தானே தைரிய மூட்டிக்கொள்ள, 'இது என்ன மடமை! என் கணவன்மார் இருவரும் வயது வந்த விளையாட்டுப் பிள்ளைகள்போல் அல்லவா இருந்தார்கள். இவர்களோ வாட்ட சாட்டமான ஆட்களாக அல்லவா இருக்கிறார்கள்! அதிலும் ஒருவன் நொண்டி, இன்னொருவன் எருமை மாடு போல் அல்லவா பருத்திருக்கிறான். என் முதல் கணவன் ஒல்லியாக அல்லவா இருந்தான்' என்று சொல்லிக் கொண்டாள்.

*

நவலினுடைய மாமாவும் அத்தையும்தான் வீட்டுக்குப் பெரியவர்கள் என்று இருந்தார்கள். உண்மையாகப் பார்க்கப்போனால், அவர்கள் இருவரும் நவலின் தயவில்தான் இருந்தார்கள். அவர்களுடைய நான்கு பிள்ளைகளும் நாட்டுப்பெண்மார்களும் அவர்களைக் கொஞ்சங்கூடத் தயவு தாட்சண்யம் பாராமல் வீட்டை விட்டுத் துரத்தி விட்டார்கள். ஆகவே, அவர்களுக்கு நவலை விட்டால் வேறு கதி இல்லை என்று ஆகிவிட்டது. அவர்களும் முதலில் நவலின் விருப்பத்துக்குச் சற்றும் பழுதின்றி நடந்து கொண்டுதான் வந்தார்கள். ஏன், நவலை மூன்றாம் முறையாகக் கல்யாணம்கூடச் செய்து கொள்ளச் சொன்னார்கள்! ஆனால் இன்று நிலைமை மாறிவிட்டது. வீட்டுக்குரியவளான நவல் மாமாவைக் கண்டு நடுங்கினாள். அதைவிட நடுக்கம் தன் அத்தையைக் காணும்போது அவளுக்கு!

"கண்ணே! இருட்டிலே என்னத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கிறாய்! விளக்கையாவது பொருத்தக் கூடாதோ!" என்றாள் அத்தை.



கடைக்காரர் :—இந்தப் புட்டியை மட்டும் தனியாக வாங்கிக் கொண்டால் இதன் விலை எட்டு அணு. புட்டியில் ஏதாவது இருந்தால் புட்டிக்கு விலை கிடையாது.

வாங்குபவர் :—அப்படியானுல் அதில் ஒரு கார்க்கைப் போட்டுக் கொடுங்கள், ஐயா!

நவல் விளக்கை ஏற்றிக் கதவிடுக்கில் வைத்துவிட்டு, அடுப்பங்கரைக்குப் போய், எரியும் அடுப்பின் வெளிச்சத்தில் அரிசி புடைக்கலானுள்.

அத்தைக் கிழவி, பாலில் கொஞ்சம் தயிரை புரைக்கு ஊற்றிவிட்டு, "புடைச்சது போதும், அரிசியைக் களைந்து கொட்டு" என்று சொன்னுள். ஆனுல் உண்மையில் 'இந்த வெளிச்சத்தில் வெறும் அடி முட்டாள்தான் புடைப்பாள்' என்று சொல்லத்தான் வாயெடுத்தாள். அந்தக் கோபத்தை யெல்லாம் தெருவில் ஓயாமல் குலைத்துக் கொண்டிருந்த நாயின் மீது செலுத்தி "இந்தச் சனியன் பிடித்த நாய்க்குக் குரைப்பது தவிர வேறு ஒன்றும் தெரியாது போலிருக்கிறது" என்ருள்.

நவல் ஒரு கணம் யோகியைப்போல் தன்னை மறந்து உட்கார்ந்திருந்தாள். அவள் காதில், காதைப் பிளக்கும் அந்த நாயின் குரைப்புச் சத்தங்கூட விழவில்லை.

ஆனுல் முன் வாசலிலிருந்த கரடு முரடான கல் தரையில் மூங்கில் கழிகள் தடவப்படும் சத்தம், அவள் காதில் தெளிவாக விழுந்தது. யாரோ வருகிருர்கள் என்று ஊகித்தாள். அவள் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. அடுத்த கணம், செருப்பாணிகள் தரையில் உராயும் சத்தமும் மற்றவனின் நொண்டி நொண்டி பூமியில் பாதத்தை மெள்ள அமிழ்த்தும் சத்தமும் அவள் காதில் தெளிவாகக் கேட்டது! அவளுடைய கூர்மையான காதில் முதல் மனிதனின் "ஜய், சீதாராம்!" என்ற குரல் தெளிவாக விழுந்தது. உடனே அவள் உள்ளத்திலிருந்து ஒரு குரல் எழும்பிக் கூறிற்று: "ஆமாம், சந்தேகமின்றி இந்தக் குரல் என் முதல் கணவரின் குரல்தான்."

வாயிற் கதவுக்குச் சற்றுத் தூரத்தில், மாமா பாயை விரித்துப் போட்டார். அவ்விருவரும் கதவை நோக்கிய வண்ணம் உட்கார்ந்திருந்தனர். அத்தை "இந்த உதவாக்கரை பசங்களுக்கு 'ஜெய் சீதாராம்' சொல்லத்தான் தெரியும். பிறந்தியார் செலவில் வாழ்ந்து ஊர் சுற்றுவதுதான் இவர்களுக்கு வேலை; வேறு வேலை என்ன!" என்று கூறினுள்.

நவலினுடைய கைகள் அடுப்புக்குக் கரி போடுவதில் ஈடுபட்டிருந்தாலும், காதுகள் வாசலில் அவர்கள் என்ன சொல்கிருர்கள், பேசுகிருர்கள் என்று கவனிப்பதிலேயே ஈடுபட்டிருந்தது. முதல் மனிதன், நவலினுடைய மாமாவிடம் கேள்வி மேல் கேள்வி போட்டுக் கேட்டுக் கொண்டிருந்தான். "உங்களுக்கு எத்தனை பிள்ளைகள்!......... என்ன! நாலு பேரில் ஒருவர் கூட இங்கே இல்லையா......! ஒரு நாட்டுப்பெண் கூட உங்களைத் தங்களிடம் வைத்துக் கொள்ள விரும்பவில்லையா......! அவர்கள், உங்கள் இருவரில் ஒருவரைக் கூட விரும்பவில்லையா! இந்த வீட்டுக்குச் சொந்தக்காரி உங்கள் மருமகளா......! அவள் என்ன தனியாகவா இருக்கிருள்......!"

அத்தை வாசற்படியில் நின்றுகொண்டு, இந்த அழைக்காத விருந்தாளிகள் கேள்விகள் கேட்டுக் கொண்டு போன வேகத்தைக் கவனித்தாள். அவளால் பொறுக்க முடியவில்லை. குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு "தம்பிகளா, இதெல்லாம் தெரிந்து உங்களுக்கு ஆகவேண்டியதென்ன! ஏன் கேட்கிறீர்கள்!" என்ருள்.

"அம்மா, தாயே! எங்களுக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. காரணமும் விசேஷமாக ஒன்றுமில்லை. உங்களைப் போன்ற வேலைாயதர்களிடம் அன்பும் மரியாதையும் செலுத்த இதெல்லாம் விசாரிப்பது தவிர வேறு என்ன பேச இருக்கிறது! இல்லையா!" என்ருன் அவர்களில் ஒருவன்.

கிழவியின் ஆத்திரம் தணிந்துவிட்டது. அவளும் அவர்களுடன் பேச உட்கார்ந்து விட்டாள்.

"தம்பி, என்ன கஷ்டம், என்ன வாழ்க்கை, இது என்ன சமுதாயம்! உலகமே தலை கீழாகச் சுற்றுவதாகத்தான் தோன்றுகிறது எனக்கு. ஏன், எங்கள் நவலையே பாருங்களேன்" என்று நவலைச் சுட்டிக் காண்பித்தாள். நவல் கதவின் மறைவிலிருந்த நிழலில் உட்கார்ந்திருந்தாள். அத்தை தொடர்ந்தாள்:

"ஆறுபேர், அண்ணன் தம்பிமாருடன் பிறந்துவிட்டு, இப்போது, இவள் ஒருத்திதான் பிழைத்திருக்கிருள். இவள் சிறு குழந்தையாக இருந்தபோதே, தாயாரும் போய்விட்டாள். இவள் அப்பனே, ஊரில் ஒருவர் பாக்கியில்லாமல் அத்தனை பேருடன் சண்டை போட்டுக் கொண்டிருந்தான். இதன் விளைவாக என்ன ஆச்சு என்றுல், எங்கள் நவலுக்கு ஒரு புருஷனை, உள்ளூரில் தேட முடியாமற் போய் வெளியூரிலிருந்து பிடித்துக் கொண்டுவர வேண்டியதாகப் போய்விட்டது. அப்படி வரும் மாப்பிள்ளை, மாமனுர் வீட்டில் உட்கார்ந்து கொண்டு சாப்பிடுவானே! அப்படி உட்கார்ந்து சாப்பிடுபவன் இருந்தால், அவன் எதுக்கும் உதவாதவனுக இருக்க வேண்டும், அல்லது சாதிப்பிரஷ்டனுக இருக்க வேண்டும், அல்லது கிழ்மகனுக இருக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டு, வந்தவர்களை ஒரு கணம் கூர்ந்து பார்த்தாள் கிழவி. பிறகு, அவள் "நான் சொன்னுற் போலவேதான் முடிந்தது. நவலுக்குக் கிடைத்த முதல் கணவன் எந்தக் காரியத்துக்கும் உதவாதவனுகவே இருந்தான்!" என்ருள்.

"ஏன் அம்மா அப்படி!" என்ருன் ஒரு சாது.

"ஏன் என்றுல், அவனுக்குத் தகப்பனுர் வழியில் சொந்தக்காரர்கள் என்று யாரும் கிடையாது. ஊர்க்காரர் கூட, அவன் தன் தாய் மாமன் வீட்டில் வசித்து வருவதாகத்தான் சொன்னுர்கள்.

"ஒரு நாள், சந்தையில், இந்த அயோக்கியன், எங்கள் கவலைப் பார்த்தான். அவ்வளவுதான். கொஞ்சங்கூட வெட்கமில்லாமல், தன் ஊரை விட்டு, தன் மாமனார் வீட்டில் குடியேறிவிட்டான். இப்போ நீங்களே சொல்லுங்கள், எந்த மடையன் இவனைத் தவிர, இப்படி வந்து மாமனார் வீட்டில் கல்லுளிமங்கனுட்டம் உட்காருவான்! இது போதாதென்று, வேலை யென்றால் சோம்பல் வந்து விடும் அவனுக்கு. வேலைக்குப் பதில் வம்புப் பேச்சுத்தான் அவனுக்குப் பிடித்திருந்தது. ஒரு விவசாயி, தன் வயிற்றையும் தன்னை அண்டியுள்ளவர்கள் வயிற்றையும் கழுவுவதற்கு ஒரு நாளெல்லாம் எவ்வளவு பாடுபடவேண்டியிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரிந்ததுதான். ஆனால் இந்த எதுக்கும் உதவாத மாப்பிள்ளை, தன் சொந்த உபயோகத்துக்கு ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் பெறுமானமுள்ள கஞ்சா கேட்டுக் கொண்டிருந்தான். இதைப் பார்த்தால் என் மைத்துனருக்கு (கவலின் அப்பாவுக்கு) எப்படியிருக்கும்! அவரால் இந்த அக்கிரமங்களை யெல்லாம் ஒரு கணமாகிலும் பொறுக்கமுடியும் என்று நினைக்கிறீர்களா! ஆகவே, அவர்களுக்குள் மனஸ்தாபம் ஏற்படலாயிற்று. நாளடைவில் அது பெரிய சண்டையாகவே மூண்டது. அதன் விளைவாக, அந்த உதவாக்கரை மாப்பிள்ளை, ஒன்று தன் தேவைகளைக் குறைத்துக் கொள்ளவேண்டும்; அல்லது வீட்டை விட்டு வெளியேற வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது. இந்த இரு வழிகளில் பின்னதைத்தான் அவன் தேர்ந்தெடுத்தான். ஒரு நாள் இரவு யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் எங்கேயோ ஓடிவிட்டான். நாங்கள் அவனை எங்கெல்லாமோ தேடினோம். கிடைக்கவில்லை. அவனை இந்தப் பூமாதேவியே விழுங்கி விட்டாளோ என்றுகூட நினைத்தோம்" என்றாள்.

அடிக்கடி குறுக்கிட்டுப் பேசிக் கொண்டிருந்த கொண்டி, "ஆமாம், சந்தேகமின்றி அவன்தான் இவ்வளவு கஷ்டங்களுக்கும் காரணம்" என்றான்.

"வாஸ்தவம்; சரியாகச் சொன்னீர்கள்" என்று ஜெமியும் மிக்க மகிழ்ச்சியுடன் ஆமோதித்தாள். ஆனால் கொண்டியின் இந்த அபிப்பிராயத்தை மற்றவன் அவ்வளவாக ரஸிக்கவில்லை.

ஜெமி ஒரு முறை பேச ஆரம்பித்தாளானால், அவளை நிறுத்துவது என்பது ரொம்பவும் கஷ்டம். அவள் தொடர்ந்தாள்:—"அப்படியும் கவல் நான்கு வருஷங்கள் அவனுக்காகக் காத்திருந்தாள். அப்படிக் காத்துக் காத்து அலுத்துப் போய்த்தான் இன்னொருவனை மணந்தாள். அவனும் முன்னைய ஆசாமியின் கோஷ்டியில் சேர்ந்தவனாகத்தான் இருந்தான். ஊரார்கூட முதல் ஆசாமியின் தூர பந்து இவன் என்று சொன்னார்கள். இதெல்லாம் எவ்வளவு தூரம் உண்மை என்பது கடவுளே அறிவார்! சிலர் இவனுக்கு ஏழு பேர் அண்ணன் தம்பிமார் உண்டென்றும், அவனுடைய பெற்றோர்கள் உயிரோடு இருக்கிறார்கள் என்றும் அவன் தன் பெற்றோரிடம் சண்டை போட்டுக் கொண்டு வந்து விட்டான் என்றும் சொன்னார்கள். ஆனாலும் அவனுக்கு நல்ல காலம் இருந்தது. கவலின் அப்பாவுக்கு அவனைப் பிடித்துப் போய்விட்டது. தம்மிடமே வேலைக்கு வைத்துக் கொண்டார். வேலைக்கு வைத்துக் கொண்ட ஒரு வருஷத்துக்குள் கவலுக்கும் அவனுக்கும் கல்யாணமும் ஆகிவிட்டது!" என்று சொல்லிச் சற்று நிறுத்தினாள் ஜெமி.

(அடுத்த இதழில் முடியும்)




## 1. பூபதியும் புவனாவும்

ஜாலபுரி என்னும் பட்டணம் ரொம்ப விநோதமெல்லாம் நிறைந்த பட்டணமாக இருந்தாலும் அப் பட்டணத்தை விட்டு ஒரு மூலையில் ஒண்டிக் கிடந்த நந்தியூர் மட்டும் குக்கிராமமாய்த் தானிருந்தது.

அந்த நந்தியூரில் ஒரு பணக்காரர் வீட்டில் வேலை பார்த்துவந்த சுசிலா என்பவளுக்கு பூபதி என்றொரு பிள்ளையும், புவனா என்ற ஒரு பெண்ணும் இருந்தனர்.

சுசிலா தன் குழந்தைகளை எப்படியோ ஏழாவது வகுப்பு வரையில் படிக்க வைத்தாள். பிறகு சம்பள மில்லாமல் படிக்க வைக்க முடியாமல் போகவே ஒருநாள் தன் எஜமானியிடம் அவ்விஷயத்தைக் கூறினாள்.

அதற்கு அந்த எஜமானி, "போடி, புத்தி கெட்டவளே! ஏழைப் பிள்ளைக்குப் படிப்பு எதற்கு? இவ்வளவு படித்ததே அவர்களுக்கு ரொம்ப ரொப்ப அதிகம். நமது வீட்டில் இன்னும் இரண்டு எருமை மாடுகள் வரப்போகின்றன. அதைக் குளிப்பாட்டி, மேய்த்து வந்து தீனிபோட்டுத் தண்ணீர் காட்டத்தான் பூபதிக்குச் சரியாக இருக்கும். பெண் கட்டைக்குப் படிப்பென்ன? போ போ, உள்ளே போய் வேலையைக் கவனி" என்று கடிந்து கூறினாள்.

சுசிலா மேலே பேசாமல் மௌனமாய்த் தன் வேலையைக் கவனிக்கச் சென்றாள்.

சுசிலா வேலைசெய்யும் வீட்டில் ஒருநாள் பூபதிக்கும் புவனாவுக்கும் அபாரமான வேலைகளிட்டபடி இருந்தார்கள். காலையிலிருந்து மாலை வரையில் ஓடி ஓடிச் செய்த வேலையால் பூபதிக்கும் புவனாவுக்கும் கால் நிற்க முடியாமல் வலித்துக் கொண்டிருந்தது. மாலை ஐந்து மணி சுமாருக்கு அவ்வீட்டுப் பெண் பூபதியிடம் பணத்தைக் கொடுத்து, "பூபதி, புவனா! இரண்டு பேரும் சீக்கிரம் கடைக்கு ஓடிப்போய் எட்டுப் படி கொள்ளு வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்று துரத்தினாள்.

இருவரும் கடைக்குப் போய்க் கொள்ளுக்குப் பதிலாக எள்ளு வாங்கி வந்தனர். மூட்டையை அவிழ்த்துப் பார்த்த எஜமானியம்மாள், "முட்டாளே! கொள்ளு வாங்கிவா என்றால் எள்ளை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாயே? உங்களை வைத்துச் சோறு போடுவதே தண்டம்? இதை எடுத்துக் கொண்டு போய்த் திருப்பி விட்டு கொள்ளு வாங்கி வாருங்கள்" என்று மறுபடியும் கடைக்கு அனுப்பினாள்.

பூபதிக்கும் புவனாவுக்கும் கால் வலியால் மறுபடியும் கடைக்கு நடந்து செல்லக் கஷ்டமாக இருந்தது. வேறுவழி இல்லாமல் எள்ளு மூட்டையைத் தூக்கிக்கொண்டு மறுபடியும் கடைக்குப் போனார்கள்.

சிறிது தூரம் போனதும் தங்களைக் கடந்து ஒரு கோச்சு வண்டி மெதுவாகச் செல்லுவதைக் கண்டனர். நடக்க முடியாமல் கொஞ்சம் காலுக்கு ஓய்வு கொடுக்கலாமென்று நினைத்து இருவரும் கோச்சு வண்டியின் பின்புறத்திலுள்ள புல்லுக் கூடைக்குள் மூட்டையுடன் ஏறி உட்கார்ந்து விட்டனர்.

வண்டி சற்று வேகமாகச் செல்ல ஆரம்பித்தது. அவ்வளவுதான். காலையிலிருந்து செக்கு மாட்டைப்போல் உழைத்த பூபதியும் புவனாவும் தங்களையும் அறியாமல் அப்படியே தூங்கி விட்டனர்.

முக்கால் மணி நேரத்திற்குப் பின் கோச்சு வண்டிக்காரன் அவ்விருவரையும் அதட்டி "நல்ல வேலை இது! வண்டியை விட்டு இறங்குங்கள் முன்னே" என்று அவர்களைப் பிடித்துக் குலுக்கின பொழுதுதான் விழித்துக் கொண்டனர்.

பூபதியும் புவனாவும் இறங்கினதும் கோச்சு வண்டி வேகமாகப் புறப்பட்டு விட்டது.

ஆனால் கடுச்சாலையில் இறங்கி நின்ற பூபதிக்கும் புவனாவுக்கும் தாங்கள் தங்களுடைய ஊரையே விட்டு வந்து விட்டதாகத் தோன்றியதுடன், அது எந்த ஊர் என்று கூடத் தெரிந்துக் கொள்ள முடியாமல் திகைத்தனர். அசட்டுத்தனமாகக் கோச்சு வண்டியில் சவாரி செய்து தூங்கி இப்பொழுது இப்படித் தவிக்கிறோமே என்று வருந்தினார்கள். பிறகு இருவரும் சாலையோடு நடந்தார்கள்.



அப்பொழுது திடீரென்று இடியும் மின்னலுமாக மேகம் திரண்டு வந்தது. ஒரு குடிசைகூடக் காணப்படாமல் நீண்டு செல்லும், மனித சஞ்சாரமற்ற அந்தச் சாலையில் அகப்பட்டுக் கொண்டு தவித்தனர். மழை வருவதற்குள் ஒதுங்க ஒரு வீட்டைக் கண்டு பிடித்து விடவேண்டு மென்று இருவரும் கைகளைக் கோத்தபடி பாதை வழியே வேகமாக ஓடினார்கள். பயத்தால் அவர்கள் மனம் பக் என்று அடித்துக் கொண்டது. சிறிது தூரம் போவதற்குள்ளாகவே டட டடவெனத் தூற்றல் போட ஆரம்பித்து விட்டது. பூபதியும் புவனாவும் மேலும் வேகமாக ஓடினர். கடைசியாக, பாழடைந்த ஒரு கோயிலைக் காணவும் மழை நிற்குமட்டும் அதில் தங்கலாமென அந்த இடிந்த கோயிலுக்குள் பதுங்கி நின்றனர்.

அவர்கள் அங்கு பதுங்கி ஐந்து நிமிஷங்கள் இருக்கும். மனிதர்கள் ஓடி வருவது போல் தடதடவென்ற சத்தம் கேட்டது. பூபதியும் புவனாவும் மூச்சுவிடக் கூடப் பயந்து அந்த உளுத்த கதவுக்குப் பின் நன்கு உள்ளடங்கிப் பதுங்கினார்கள்.

இருவருக்கும் கோயிலுக்குள் வந்திருப்பது ஒரு ஸ்திரீயும் ஒரு புருஷனும் என்பது தெரிந்தது. அவர்கள் பேசுவது காது கேட்கவே, உற்றுக் கேட்டனர்.

“நான் சொல்லுகிறபடி செய்து விட்டு வந்தால் நான் உன்னோடு வருவேன். இல்லேன்னா மழை விட்டதும் என் பாட்டில் நான் போய் விடுவேன். ஆமாம். தெரிஞ்சுக்கோ. இந்தப் பாழுங் கோயிலிலேயே ஒரு இடத்திலே அதைப் புதைச்சு வையேன். இருட்டு அமளியெல்லாம் அடங்கி நாலு மாசம் ஆனபிறகு நாமே எடுத்துக்கிட்டு அசலூரு போயி அலக்கலக்காப் பிரிச்சு விதானமா வித்துப் பிழைச்சாப் போச்சு!” என்றது ஒரு பெண்குரல்.

பிறகு அந்த ஆண் சுற்று முற்றும் பார்த்து விட்டு ஓரிடத்தில் குனிந்து, தான் கொண்டு வந்திருந்த ஒரு பையினின்றும் நீண்ட திருகாணி போன்ற ஆயுதம் ஒன்றால் பள்ளம் தோண்டிவிட்டு, தனது இடுப்பில் வைத்துக் கொண்டிருந்த எதையோ எடுத்து அந்தப் பள்ளத்தில் வைத்து நன்றாக மூடிவிட்டு, அந்த ஸ்திரீயையும் அருகில் கூப்பிட்டு அப்பொருளைக் காட்டினான்.

“இந்த இடத்தை நீ நல்லா மனதில் நினைவு வெச்சுக்கோ. நானும் வெச்சுக்கிறேன்” என்றான் அவன்.

அப்பொழுது மழை விட ஆரம்பித்து விட்டது. ஆகவே அந்தப் புருஷனும் ஸ்திரீயும் ஏதேதோ பேசியபடி கோயிலை விட்டுப் புறப்பட்டுச் சென்றனர்.

கால் மணிக்குள் மழை நன்றாக நின்று விட்டது. அவ்விடத்தை விட்டுச் சென்ற அந்தப் புருஷனும் ஸ்திரீயும் திரும்பி வரவில்லை என்பதை உணர்ந்த பூபதியும் புவனாவும் மெல்ல ஒளிந்திருந்த இடத்தை விட்டு வெளியில் வந்தனர். அவர்கள் ஏதோ புதைத்த இடத்தைத் தோண்டிப்பார்த்தனர்.

கண்ணைப் பறிக்கும்படியான வயிரங்கள் பதித்த, விலை உயர்ந்த அழகிய மாலை ஒன்று அதனுள் இருந்தது.

அப்பொழுது புவனா, “அண்ணா, இந்த அழகிய மாலையை என் கழுத்தில போட்டுக் கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!” என்று பூபதியைக் கேட்டாள்.



"ஐயோ! இது திருடிக்கொண்டு வந்திருக்கும் நகையாகத் தானிருக்கும். நாமெடுத்துக் கொண்டு போனால் நமக்குத்தான் ஆபத்து வரும்!" என்றான் பூபதி.

"அண்ணா, அப்படியானால் இதை நாம் வேறு ஒரு இடத்தில் பத்திரமாக ஒளித்து வைத்து விடலாம். அந்தத் திருடனும் வந்து ஏமாந்து போவான். யார் வீட்டு மாலையோ இது! அநியாயமாய்த் திருடிக் கொண்டு வந்தான் அல்லவா? அவனை அப்படித்தான் ஏமாத்தணும்" என்றான் புவனா. பிறகு இருவரும் இடம் பார்த்தனர்.

புவனா, "அண்ணா, நீ பேசாமல் அந்தச் சுவர்ப் பிறையில் இருக்கும் பொந்துக்குள் இந்த மாலையைப் பையோடு போடு. அப்புறம், மேலே நிறைய கல்லையும் மண்ணையும் போட்டு அடைத்து விடலாம்!" என்றான்.

பூபதிக்கும் வேறு யோசனை ஒன்றும் தோன்றவில்லை. அவர்கள் மட்டும் இருக்கும் அந்தப் பாழடைந்த கோயிலுக்குள் வரவர இருள் சூழவும் ஆரம்பித்தது. சீக்கிரத்தில் அந்த மாலையைப் பிறையிலுள்ள பொந்தில் போட்டு மண்ணையும் கல்லையும் போட்டுக் குத்திக் குத்தி நன்றாக அடைத்து விட்டு, அந்தப் பாழடைந்த காளி கோயிலை விட்டு இருவரும் வெளியில் வந்தனர்.

மழை நன்றாக நின்றிருக்கும் பாதையில் ஒரு மனிதரையும் காணவில்லை.

இரவு வருவதற்குள் ஒரு ஊரைக் கண்டு பிடித்தால்தான் தாங்கள் பிழைக்க முடியும் என்று தீர்மானித்து மனித சஞ்சாரமற்ற அந்தப் பாதையில், புவனாவும் பூபதியும் ஒருவர் கையை ஒருவர் இறுகப் பற்றியபடி தலைதெறிக்க ஓடினார்கள். (தொடரும்)

# சுலோசனாவின் ஆத்திரம்!

விஜயம்

அவர்கள் வீட்டுக்கு டெலிபோன் வைத்ததும் எல்லோரையும் விடக் குழந்தை சுலோசனாவுக்குத்தான் சந்தோஷமாயிருந்தது. 'டிர்ர்ரிங்', 'டிர்ர்ரிங்' என்று டெலிபோன் மணி அடிக்கடி அடிப்பதும் அப்பா 'ஹலோ!' என்று கூப்பிட்டுப் பேசுவதும் அவளுக்கு உற்சாகமாயிருந்தது. ஆபீஸிலிருந்து அப்பா டெலிபோனில் அம்மாவைக் கூப்பிட்டுப் பேசுவார். அம்மாவும் சில சமயங்களில் அப்பாவைக் கூப்பிட்டுப் பேசுவாள். அத்தை வீட்டிலிருந்து அவள் மகன் முத்து, சுலோசனாவை டெலிபோனில் கூப்பிட்டு ஏதாவது சொல்லுவான். வீட்டுக்கு டெலிபோன் வந்ததிலிருந்து சுலோசனாவுக்கு நேரம் போவதே தெரியவில்லை.

சுலோசனா எப்போதும் டெலிபோனுக்கு அருகிலேயே உட்கார்ந்திருப்பாள். மணி அடித்தால் ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்துக் கேட்டு அவரவர்கள் சமாசாரத்தை அவரவர்களிடம் அவசரமாகக் கூப்பிட்டுச் சொல்லுவாள்.

அன்றையதினமும் வழக்கம் போல் சுலோசனா டெலிபோனுக்கு அருகில் உட்கார்ந்திருந்தாள்.

'டிர்ர்ரிங், டிர்ர்ரிங்' என்று டெலிபோன் மணி அடித்தது. சுலோசனா ரிஸீவரைக் காதில் எடுத்து வைத்துக் கொண்டு தன் இனிமையான குழந்தைக் குரலில் "ஹலோ! யார் பேசுகிறது?" என்றாள்.

"ஹலோ! மிஸ்டர் ராமநாதன் இருக்கிறாரா?" என்றது டெலிபோன் குரல்.

"எங்கப்பாவைத்தானே கேட்கிறீர்கள்? அவர் வீட்டில் இல்லையே, ஸார்!"

"அம்மா இருக்கிறாளா?"

"இல்லையே, அப்பாவோடு வெளியே போயிருக்கிறாள்."

"உன் அண்ணா சந்துரு இருக்கிறானா?"

"இல்லையே! எங்கேயோ பந்து விளையாடப் போயிருக்கிறான்!"

"சரி, அக்கா கமலி இருக்கிறாளா?"

"இல்லை. இன்னிக்கு ஸ்பெஷல் கிளாஸ். அதற்குப் போயிருக்கிறாள்!"

"அப்படியா? உங்கள் வீட்டு வேலைக்காரன் ராமு இருக்கிறானா?"

"இல்லையே! அவன் கடைக்குப் போயிருக்கிறான்!"

"சரி. உங்கள் வீட்டு மாடியிலே குடித்தனம் இருக்கிறாரே பல் டாக்டர், அவர் இருக்கிறாரா?"

"அவர் ஊருக்குப் போய் நாலு நாளாகிறதே!"

"என்ன அம்மா, குழந்தை! உங்கள் வீட்டிலே ஒருத்தரும் இல்லை என்கிறாயே!" என்று டெலிபோனில் பேசியவர் அலுத்துக் கொண்டார்.

சுலோசனாவுக்கும் இத்தனை நேரம் டெலிபோனில் பேசிய அலுப்பில் ஆத்திரமாக இருந்தது.

"ஹலோ! நீங்கள் வீட்டில் இல்லாதவர்களையே கேட்கிறீர்கள். இதோ என் தங்கை லீலா தொட்டிலில் தூங்குகிறாள். தம்பி ரமணி கூடத்தில் விளையாடுகிறான்! அவனுக்கும் அவளுக்கும் பேசத் தெரியாது. என்னுடைய நாய்க்குட்டி ஜிம்மி இருக்கிறது!" என்று சொல்லி விட்டுச் சுலோசனா டெலிபோன் ரிஸீவரை டக்கென்று வைத்து விட்டாள்.





# சிரிக்கும் சிங்கம்

சாமா

ஹாஹ்ஹா... ஹா... ஹா என்று சர்க்கஸ் சிங்கம் இரைந்து சிரித்தது. "இதென்னடா கோபு! இந்தச் சிங்கம் மனிதர்களைப் போல் சிரிக்கிறது! ரொம்ப சாதுவாக வேறு இருக்கிறது; அதை ஆட்டி வைப்பவன் கையில் சாட்டை, துப்பாக்கி ஒன்றுமே இல்லையே!" என்று ஆச்சரியத்துடன் சொன்னான் அங்கு வேடிக்கை பார்க்க வந்த சீனு.

"அது ஒரு கதை, கேள். சொல்லுகிறேன்! ஒரு கொடிய காட்டில் இந்தச் சிங்கம் தன் மனைவியுடன் வசித்து வந்தது. திடீரென்று ஒரு நாள் அதன் மனைவி காணாமற் போய் விட்டாள். சிங்கம் தேடித் தேடி அலைந்தது. மனைவியை நினைத்துக் கொண்டு பாதி நேரம் பட்டினியாகவே கிடந்தது.

"ஒரு நாள் சிங்கம் ஒரு வலையில் சிக்கியது. என்ன திமிறியும் தப்ப முடியவில்லை. பிறகு சிங்கத்தைச் சர்க்கஸ் கூண்டில் அடைத்தார்கள். அதே கூண்டில் தன் மனைவி உயிருடன் இருப்பதைப் பார்த்த சிங்கம், தன் மனிதப் பகையெல்லாம் மறந்து ஆனந்தத்தில் சிரித்தது, குதித்தது. அதன் மனைவியும் ஆரவாரம் செய்தது. அன்றைய தினத்திலிருந்து அவை இரண்டும் தங்கள் நன்றியை அவர்களுக்குத் தங்களுடைய நடத்தை மூலமாகத் தெரிவித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டன!" என்று முடித்தான் கதையை கோபு.







# ஸ்ரீமதி சுபத்ராபாய் அம்மையின் பஜனை யாத்ரை

பழைய காலத்தில் இந்தப் புண்ணிய பாரத பூமியில் துளசிதாஸ், துக்காராம், கபீர்தாஸ், சைதன்யர், மீராபாய், சக்குபாய், முதலிய பக்த மணிகள் பகவானுடைய திரு நாமங்களைப் பக்தி பரவசமாகப் பாடி ஆடிக் கொண்டே நாடெங்கும் தீர்த்த யாத்திரை செய்தார்கள் என்றும், லட்சக்கணக்கான மக்கள் அவர்களைத் தரிசித்தும் அவர்களுடைய நாம சங்கீர்த்தன பஜனையைக் கேட்டும் உலகத் துன்பங்களை மறந்து பேரின்ப அநுபவத்தை இவ்வுலகிலேயே பெற்றார்கள் என்றும் படித்திருக்கிறோம்; கேட்டிருக்கிறோம். அத்தகைய துளசிதாஸ் மீராபாய், முதலிய பக்த மணிகளின் பரம்பரையில் வந்தவர்கள் இந்த நாளிலும் இல்லாமற் போய் விடவில்லை என்பதற்கு ஸ்ரீமதி சுபத்ரா பாய் அம்மையார் சான்றாக விளங்குகிறார்கள். மதுரையில் சௌராஷ்டிர குலத்தில் பிறந்து வளர்ந்த இந்த மாதரசியார் பூர்வ ஜன்ம வாசனையின் மகிமையால்



பகவானுடைய பாதகமலங்களில் பக்தி பூண்டு நாட்டில் பக்தி மார்க்கத்தைப் பரப்ப உறுதிகொண்டு தீர்த்த யாத்திரை செய்து வருகிறார்கள். ஸ்ரீமதி சுபத்ரா பாய் அம்மாளும் அவருடைய சிஷ்ய பரம்பரையினர் சுமார் நூறு பேரும் ஒரு மாதத்துக்கு முன்பு சென்னைக்கு விஜயம் செய்தார்கள். தினந்தோறும் காலையிலும் மாலையிலும் நாம சங்கீர்த்தனம் நடத்தி வந்தார்கள். ஸ்ரீமதி சுபத்ரா பாய் தாமே 'கவனம்' செய்த பக்தி மயமான இனிய தமிழ்ப் பஜனைப் பாடல்களை கணீர் என்ற குரலில் உள்ளம் உருகிப் பாடும் போது கேட்போரின் உள்ளங்களும் உருகி விடுகின்றன. கோராகும்பர் முதலிய பக்தர்களின் சரிதங்களைக் காலட்சேபமாகவும் செய்கிறார்கள். ஸ்ரீமதி சுபத்ரா பாய் அம்மையின் தலைமையில் இந்த பஜனை கோஷ்டியார் நூறு பேரும் சென்னையிலிருந்து கால்நடை யாத்திரையாகப் பண்டரிபுரத்துக்குப் புறப்படுகிறார்கள். போகும் போது வழி யெங்கும் பகவந்நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டு போவார்கள். வழியில் ஸ்ரீமதி சுபத்ரா பாய் அம்மையாரின் பஜனை யாத்திரை பக்த கோஷ்டிக்கு அதிகமான சிரமங்கள் ஏற்படாதபடி வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்து அனுப்புவது சென்னை நகரில் உள்ள பக்த ஜனங்களின் முக்கிய கடமையாகும்.




ர. வேங்கடரத்தினம்

நடராஜன் கடிதத்தைப் படித்துக்கொண்டே உதட்டைக் கடித்துக் கொண்டு நின்றார். சுந்தரியம்மாள் துடி துடிப்புடன் கணவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறதோ என்று அவள் மனம் 'பக் பக்' கென்று அடித்துக் கொண்டது. அப்பா என்ன கூறப் போகிறாரோ என்று காதைத் தீட்டி வைத்துக் கொண்டு கேட்கத் தயாராய் லக்ஷ்மி அடுத்த அறையில் ஆவலோடு இருந்தாள். இம்மூவர் விஷயத்திலும் பட்டுக் கொள்ளாதவள் போல சரஸ்வதி கூடத்தில் உட்கார்ந்திருந்தாள்.

"பையனுக்குப் பெண்ணைப் பிடித்திருக்கிறதாம்......" என்று நடராஜன் சொல்லி நிறுத்தியது சுந்தரியை ஒரு கலக்குக் கலக்கி யெடுத்து விட்டது.

"சீர் என்று நிறையச் செய்யாவிட்டால் கூடப் பரவாயில்லையாம். ஆனால் கல்யாணம் நன்றாய் நிரக்கும்படி செய்ய வேண்டுமாம். கல்யாணச் செலவு நாலு நாலரையை எட்டிப் பிடித்தாலும் தயங்காமல் இருக்கத் தயாரா என்று பிள்ளையின் தகப்பனார் கேட்டு எழுதியிருக்கிறார்."

சுந்தரியின் முகத்தில் கேள்விக்குறி பிரதிபலித்தது.

"பையன் ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணி விட்டு உதவிக் கலெக்டராக இருக்கிறானாம். பெண் பார்க்க வந்த போது அதெல்லாம் ஒன்றும் சொல்லவில்லை. அப்பொழுது பரீட்சை எழுதிய சமயமாய் இருந்திருக்கும். அதனால் முடிவு வந்தப்புறம் தெரிவித்துக் கொள்ளலாம் என்று பையன் இருந்திருப்பான். கெட்டிக்காரன்தான்! இல்லாமலா கலெக்டரும் ஆகி யிருக்கிறான்!"

லக்ஷ்மியின் வதனத்தில் மலர்ச்சி பாய்ந்தோடியது.

"அவன் கெட்டிக்காரனா, இல்லையா என்பது இருக்கட்டும்! நீங்கள் என்ன முடிவு பண்ணியிருக்கிறீர்கள், அதைச் சொல்லுங்கள் முதலில்" என்று சுந்தரி வெடுக்காகப் பேசினாள்.

"மாப்பிள்ளை ஐ. ஏ. எஸ். காரன் என்றால், ஆசையாய்த்தான் இருக்கிறது. கலெக்டர் வேலை என்றால், சாமானியமா! அதெல்லாம் நன்றாய்த்தான் இருக்கிறது. ஆனால் பணம் தான் கையைக் கடிக்கும்போல் இருக்கிறது!" என்றார் நடராஜன்.

சுந்தரி, "அவர்களும் அப்படி ஒன்றும் அதிகமாகக் கேட்டு விடவில்லை; அவர்கள் கல்யாணத்தை நன்றாக நடத்தினால் போதும் என்பதாகத்தானே சொல்கிறார்கள்!" என்றாள்.

"இந்த நாளில் நாலாயிரம், ஐயாயிரம் கூட இல்லாமல் என்னமாய்க் கல்யாணம் பண்ணுவது? அவர்கள் எவ்வளவோ நல்லவர்களாய்த்தான் இருக்க வேண்டும்."

"இந்த இடம் கிடைத்தால், அதிர்ஷ்டம்தான்."

அடுத்த அறையில் இருந்து ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மிக்கு அப்போது மன நிலை எங்கெங்கோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

"பிராவிடெண்ட் பண்ட் பணம் நாலாயிரத்தைந்நூறு ரூபாயையும் வாங்கப் போட்டுப் புரட்டியடித்துச் சமாளிக்கலாம் என்று ஒரு யோசனை இருக்கிறது."

இந்த யோசனைக்குச் செவி சாய்த்ததாகக் கூட சுந்தரி காட்டிக் கொள்ளவில்லை.

"கல்யாணத்தை ஒருவாறு முடித்து விட்டால், நாம் எப்படியோ நம் பிழைப்பைப் பார்த்துக் கொள்கிறோம்" என்றார் நடராஜன் மேலும்.

சுந்தரி ஒப்புக் கொள்ள வில்லை:

"ஐ. ஏ. எஸ். பையன் என்றவுடனே வாயைப் பிளந்து விடாதீர்கள். இன்னொரு பெண் இருக்கிறாள் என்பதைக் கொஞ்சம் நினைவில் வைத்துக் கொண்டு பேசுங்கள். எனக்குக் கூடத்தான் மாப்பிள்ளைப் பையன் கலெக்டர் என்றால், ஆசையாய் இருக்கிறது. எப்படியாவது கல்யாணத்தைப் பண்ணி விட வேண்டும் என்று தோன்றுகிறது. நமக்கு ஒரே பெண்ணாய் இருந்தால், எவ்வளவு கச்சிதமாய் இருந்திருக்கும் என்று எண்ணத் தோன்றுகிறது" என்றாள் சுந்தரி.

"அதெல்லாம் சரி. இப்பொழுது என்னை என்ன பண்ணச் சொல்கிறாய்!"

"என்ன பண்ணப் போகிறீர்கள் என்றுதான் கேட்கிறேன்" என்று கூறினாள் சுந்தரி.

"அதுதான் தெரியவில்லை."

எல்லோர் வாழ்க்கையிலும் இது போன்ற தொரு கட்டம் வருவது உண்டு.

"சரஸ்வதிக்கும் வயது பதினைந்து ஆகி விட்டதே. அவளுக்கும் ஒரு பையனைப் பார்த்துப் பண்ண வேண்டியதுதானே! அவள் ஒருத்தி இருக்கிறாள் என்ற சிந்தையே இல்லாமல் ஐ. ஏ. எஸ். காரனையும் ஐ. பி. எஸ். காரனையும் பார்த்து ஆசைப் பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஏதாவது நடக்கக் கூடிய காரியமாகப் பேசுங்கள். என்னைக் கேட்டால், இரண்டு பேருக்கும் ஒரே பந்தலில் பண்ணிவிடலாம். நமக்கும் செலவு குறையும்!"

நடராஜன் ஒப்புக்கொள்ளும்வகையில் மௌனம் வழங்கினார். உள்ளே லக்ஷ்மி வான சஞ்சாரத்தி லிருந்து உலகிற்கு வந்தாள். சரஸ்வதி தீவிர மாய்க் கேட்டுக் கொண்டிருந்தாள். அம்மாவின் குரல் கேட்டது.

"அதனால், மூத்தவளை ஐ. ஏ. எஸ். காரனிட மும், இளையவளை ஒரு சமையற்காரப் பையனிட மும் கொடுக்கிற எண்ணத்தை விட்டு விடுங்கள். நமக்குக் கலெக்டரும் வேண்டாம்; கவர்னரும் வேண்டாம். இரண்டு பெண்களுக்கும் இரண்டு சாதாரண குமாஸ்தாக்களாகப் பாருங்கள். அது போதும் நமக்கு. மூத்தவளை மட்டும் நல்ல இட மாகப் பார்த்துக் கொடுத்து விட்டு, அப்புறம் கையில் காசு இல்லை யென்று இளையவளை ரொம் பச் சின்ன இடத்தில் கொடுத்து, அவளைக் கண் ணைக் கசக்கிக் கொண்டிருக்க விட வேண்டாம். இரண்டுக்கும் இரண்டு குமாஸ்தாவாக இருந்தால்



ஒருவர்:—பையா, இந்த நாய்க்கு நல்ல ரொட்டியாகக் கொடு; நாய்தானே என்று மட்ட ரக மானதாகக் கொடுத்து விடாதே!

கடைக்காரப் பையன்:— என்னுங்க ஸார்! அப்படிச் சொல்கிறீங்க? அந்த மாதிரி நீங்கள் வேறே, நாய் வேறேன்னு வித்தியாசம் பார்க்கிறதில்லீங்க!

போதும். நீங்கள் கூட குமாஸ்தாதான். நான் என்ன, சந்தோஷமாக இருக்கவில்லையா!" என்று எதிர்க் கேள்வி போட்டாள் சுந்தரி.

இதைக் கேட்டுக்கொண் டிருந்த சரஸ்வதி உள்ளே யிருந்து ஓடி வந்தாள்.

"அப்பா, நீங்கள் அம்மா சொல்வதைக் கேட்க வேண்டாம்."

சுந்தரி விழித்தாள்; நடராஜன் திகைத்துப் போனார். லக்ஷ்மிக்கும் ஒன்றும் விளங்கவில்லை.

சரஸ்வதி தெளிவான குரலில் பேசினாள்; "நீங்கள் லக்ஷ்மியை அந்தக் கலெக்டர் பைய னுக்கே கொடுங்கள். அவர்களோ பணத்தாசை பிடித்தவர்களாக இல்லை. அவர்கள் சொல்லும் செலவுக்குப் பணமோ நம்மிடம் இருக்கிறது. பிராவிடெண்ட் பணம் செலவுக்குச் சரியாக இருக்கும். நீங்கள் அக்காவை அந்த இடத்தி லேயே கொடுங்கள்."

"இந்தாடி, நீ உள்ளே போ" என்று சரஸ்வதி யைப் பார்த்துக் கூறிவிட்டு, சுந்தரி சொன்னாள்: "இவள் உளறுவதைப் பொருட் படுத்தாதீர்கள். கையில் இருக்கிற பணத்தைக் கொண்டு, ஆளுக்கு இரண்டாயிரத்துச் சொச்சம் ரூபாயைப் போட் டுக் கலியாணத்தைப் பண்ணி விடுங்கள்."

சரஸ்வதியும் நிறுத்தவில்லை.

"அம்மா சொல்வது போல, நான் நாளைக்குக் கண்ணைக் கசக்கிக் கொண்டோ, வயிறு எரிந்து கொண்டோ நிற்க மாட்டேன். அக்காவை அந்தப் பையனுக்கே கொடுங்கள். அம்மா சொல்கிறாளே இரண்டு பேருக்கும் இரண்டு குமாஸ்தா போதும் என்று, அதைக் கொஞ்சம் மறந்து விடுங்கள். நீங்கள் குமாஸ்தா; உங்கள் மாப்பிள்ளைகள் குமாஸ்தா; அவர்களுக்கும் தங்கள் பெண்களை குமாஸ்தாக்களுக்குக் கொடுக்கக் கூடிய யோக்கி யதைதான் இருக்கும். ஆக, இந்தக் குமாஸ்தா— சங்கிலி வம்ச பரம்பரையாக நீண்டு கொண்டே போக வேண்டாம். நீங்கள் அக்காவைக் கலெக் டர் பையனுக்குக் கொடுங்கள். என் அகத்துக் காரர் சமையற்காரராய் இருந்தாலும், ஒன்றும் மோசமில்லை. நான் கண்ணைக் கசக்கிக் கொண்டு காட்சியளிக்கப் போவதில்லை."

"இது என்ன கூத்து!" என்று நடராஜன் வியந்தார்.

"ஒரு கூத்துமில்லை; நடக்கப் போகிறதைத் தான் சொல்கிறேன். ஆமாம், அக்காவை அந்த இடத்தில் கொடுக்கா விட்டால், நான் கலியாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன். என் பிடிவாதம் தான் உங்களுக் கெல்லாம் தெரியுமே!"

சரஸ்வதியின் குணம் சுந்தரிக்குத் தெரிந்தது தான். எனவே வீணில் அவளோடு வார்த்தை யைச் செலவழிப்பதில் பயன் இல்லை என்று அவள் இருந்துவிட்டாள். அவளுக்கு அப்போது லக்ஷ்மி யின் மீதுதான் அவ்வளவு கோபமும் வந்தது; காதில் விழாதவள் போல் இவ்வளவையும் கேட் டுக் கொண்டே உட்கார்ந்திருக்கிறாளே! மானங் கெட்டவள். தனக்காகத் தன் தங்கை வாழ்க் கையையே கெடுத்துக் கொள்கிறாளே என்று அவள் புத்திக்கு எட்டாதோ! 'எனக்கு ஒரு கலெக்டரும் வேண்டாம்; சாதாரண இடம் போதும்' என்று ஒரு மறுவழி வந்து சொல்ல மாட்டாளோ? துப்பு கெட்டவள்!

சுந்தரியின் கோபம் நியாயமானதுதான். உப சாரத்திற்காகவாவது லக்ஷ்மி வந்து 'வேண்டாம்' என்று ஒரு வார்த்தை சொல்லலாம், அல்லவா! அவள் வாய் திறவாது உட்கார்ந்திருந்தாள். சுந்தரி முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

குமாஸ்தா நடராஜன் கிடைபர் ஆன கையுடன் கைக்கு வந்த பணம் நாலாயிரத்து ஐந்நூறு ரூபாயையும் கொண்டு முதல் காரியமாக லக்ஷ்மிக்குக் கல்யாணம் செய்து முடித்தார். கண்ட பலன் மாப்பிள்ளை கலெக்டர் என்ற பெருமையைத் தவிர வேறு ஒன்றுமில்லை. கை வறண்டுவிட்டது; காக மாதாந்திரப் பென்ஷன் உருவத்தில் புழங்கியதோடு சரி.

லக்ஷ்மி புருஷனோடு குடித்தனம் தொடங்கி, எழெட்டு மாதம் கூட ஓடிவிட்டது. இன்னும் நடராஜனுக்கு, சரஸ்வதிக்கு ஏற்ற வரன் அகப்படவில்லை. சுந்தரி சொல்லிக் காட்டிக்கொண்டே இருந்தாள்: "அப்போதே நான் சொன்னேனே, கேட்டீர்களா! இப்படியெல்லாம் வரும் என்று எனக்குத் தெரியும். அவள் கெட்டிக்காரி! கலெக்டர் ஒருவனைப் பிடித்திழுத்துக் கொண்டு போய் விட்டாள். அசட்டுப் பெண், சரஸ்வதிதான் கண்ணைக் கசக்கிக்கொண்டு நிற்க வேண்டும்."

"நான் ஒன்றும் கண்ணைக் கசக்க வேண்டாம். அப்பா, நீங்கள் வீணில் அம்மா சொல்வதையெல்லாம் கேட்டுக் கலவரம் அடையாதீர்கள். எப்போதுமே அம்மா இப்படித்தான்! நான்தான் உங்களுக்கு உறுதி கூறியிருக்கிறேனே! பையன் எவ்வளவு சின்ன இடமானாலும், எனக்குச் சம்மதம்தான்!" என்றாள் சரஸ்வதி.

சுந்தரி, "அப்போதே இவள் வார்த்தையைக் கேட்டுத்தான் கெட்டுப் போனீர்கள். ஊரெல்லாம் என்ன பேசிக் கொள்கிறார்கள், தெரியுமா! நீங்கள் மூதல் பெண்ணுக்கு அந்தஸ்து தெரியாமல், அகலக் காலாக வைத்து விட்டீர்கள். அதனால்தான் இவ்வளவு திண்டாட்டமும் என்று சொல்கிறார்கள்."

"ஊர்க்காரர்கள் வார்த்தையை நீங்கள் இலட்சியம் பண்ணுகிறீர்கள், அப்பா. இவ்வளவெல்லாம் பேசுகிறார்களே, உங்களுக்கு ஒரு ஐந்நூறு ரூபாய் தந்து உதவட்டும்; பார்க்கலாம்!"

நடராஜனுக்குச் சரஸ்வதியின் சொற்கள் ஊக்கம் மட்டும் நிரம்பத்தான் ஊட்டின. அவர் தேடியதற்குக் கடைசியில் ஒரு பையன் அகப்பட்டான். சம்பளம் நாற்பது ரூபாய்; செட்டியார் மண்டியில் கணக்கெழுதிப் பிழைப்பு நடத்திக் கொண்டு வந்தான். உற்றார், உறவினர் ஒருவரும் கிடையாது. அருகில், தூர பந்துக்கள் எவரேனும் உண்டோ, என்னவோ!

சரஸ்வதி சம்மதம் தெரிவித்தாள். அவனை அந்தப் பையனுக்குக் கொடுத்து விடலாம் என்று நடராஜன் தீர்மானித்தார்.

* * *

லக்ஷ்மியும் அவள் புருஷனும் பேசிக் கொண்டிருந்தனர்.

"அப்பா கடிதத்தைப் பார்த்தீர்களா! என் தங்கை சரஸ்வதிக்கு ஒரு வரன் பார்த்திருக்கிறாராம். பையன் ஒரு கடையில் கணக்கெழுதுகிறானும். மாதச் சம்பளம் நாற்பது ரூபாய் என்று எழுதியிருக்கிறார்."

"ஏன், வேறு இடம் கிடைக்கவில்லையோ!"

"எப்படிக் கிடைக்கும்! அவருடைய முதல் மாப்பிள்ளை ஒரேயடியாக நாலாயிரத்துச் சொச்சம் ரூபாயையும் தம் கல்யாணத்திலேயே விழுங்கிக் கொண்டு விட்டாரே! இரண்டாவது பெண்ணை நல்ல இடத்தில் தருவதற்கு, ஏழை குமாஸ்தாவிடம் பணம் ஏது!"—லக்ஷ்மியின் கண்களில் குறும்புத்தனம் குறுகுறுத்தது.



எஜமான்:—ராமா, நானும் அம்மாளும் உன்னைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தோம். உன்னிடம் ஒட்டுக் கேட்கிற பழக்கம் இருக்கிறது. ஆகையினாலே...!

ராமன்:—தெரியும் எஜமான்! நானே நானேயோடு வேலையிலிருந்து நின்று விடுகிறேன்!

"அப்பேர்ப்பட்ட பேராசைக்கார மாப்பிள்ளையிடம் பெண்ணைக் கொடுப்பானேன்! 'நீயும் ஆச்சு; உன் கலெக்டர் பதவியும் ஆச்சு' என்று முகத்தில் அறைந்தாற் போல் கூறிவிட்டு, பணத்தாசை இல்லாத நல்ல பையனைப் பார்த்து அவர் பெண்ணைக் கொடுப்பதுதானே!"

"உண்மையைச் சொன்னால் இவ்வளவு கோபமா! இப்படியா ஒரு பெண்ணின் கன்னத்தைக் கிள்ளுவது! போனால் போகிறது, ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணியிருக்கிறார்; தனக்குப் பெண் பிடித்திருக்கிறது என்று எழுதிக் கேட்டிருக்கிறார் என்று எண்ணி அவர் மூத்த பெண்ணைத் தந்தார்."

"சீ, அவளுக்கு என்ன சுயநலம்! தன் தங்கையை அந்தரத்தில் நிறுத்தி விட்டுத் தான் மட்டும் நல்ல உத்தியோகஸ்தனைப் பார்த்துப் பண்ணிக் கொண்டிருக்கிறாளே! அவள் தன் தங்கையின் கல்யாணத்திற்கு ஏதும் பணம் மிச்சம் வைத்திருக்கக் கூடாதோ! அவ்வளவையும் அந்தப் பேராசைக்காரக் கலெக்டரிடமா கொண்டு போய்க் கொட்ட வேண்டும்! அவள் தனக்குச் சின்னச் சம்பளக்காரன் ஒருவன் போதும் என்று சொல்லியிருந்தால், அவள் தங்கையின் நிலைமை இப்போது இவ்வளவு மோசமாய்ப் போயிருக்காதல்லவா!" என்றாள் லக்ஷ்மியின் கணவன்.

"அந்த மூத்த பெண்ணைப் பற்றி, நீங்கள் என்ன, அவளுடைய அம்மாவே சுயநலக்காரி என்றுதான் நினைத்தாள். தங்கையின் வாழ்வைக் கெடுத்து, தான் மட்டும் நல்ல உத்தியோகஸ்தனைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முன் வருகிறாளே என்று அவளைப் பற்றி இழிவாக எல்லோரும் எண்ணினர். ஆனால் அவளுடைய உள்ளத்தில் ஒரு பெரிய திட்டம் இருந்து வருகிறது. அது ஒருவருக்கும் தெரியாது."

லக்ஷ்மியை வியப்போடு நோக்கினான் அவன்.

"தன் தங்கைக்கு நல்ல இடம் கிடைக்காது. ஏதாவது சின்ன உத்தியோகத்தில் இருப்பவன்தான் மணந்து கொள்ள முன் வருவான். அப்போது எல்லோரையும் திடுக்கிடும்படிச் செய்ய, கல்யாணத்தை நிறுத்தச் சொல்லி, அந்தப் பெண் தன் கணவரிடம் சொல்லி அவரிடமிருந்து மூவாயிரம் ரூபாய்ப் பணம் வாங்கியனுப்ப வேண்டும் என்று எண்ணம் இட்டிருக்கிறாள். ஏன், தன்

கணவர் மூலம் தன் தங்கைக்கு நல்ல இடம் ஏதும் ஏற்பாடு செய்து கொடுத்து விடலாம் என்று கூட உத்தேசம்! ஏனென்றால், அழகிலோ அடக்கத்திலோ பெண் முதல் தரம். கொஞ்சம் பண உதவி மட்டும் செய்து விட்டால், போதும், நான்—நீ என்று போட்டி போட்டுக்கொண்டு எத்தனையோ பிள்ளைகள் வருவார்கள்.''

லக்ஷ்மி புருஷனை ஆசையோடு கவனித்தாள்.

'' ஏதோ பிள்ளைத்தாய்ச்சிப் பெண் ஆசையோடு சொல்கிறேனே! கொஞ்சம் கேட்போம் என்று காது கொடுத்துக் கேட்டால் ஒரே யடியாக மூவாயிரமும் நாலாயிரமுமாய்க் கேட்கிறாயே!''

'' அது மட்டுமல்ல: உங்கள் மைத்துனிக்கு நல்ல இடத்துப் பையன் ஒருவனைப் பார்த்துச் சொல்வதும் உங்கள் பொறுப்புத் தான்! ஆமாம், ஒரு விஷயம் ஞாபகம் இருக்கட்டும். அன்று அவள் தியாகம் செய்ய முன் வராதிருந்தால், உங்களுக்கு இந்த மனைவி கிடைத்திருக்க மாட்டாள்!''

'' அடேயப்பா, பிரமாத அப்ஸர ஸ்திரீயல்லவா நீ!'' என்று ஏகத்தாளமாகச் சொன்னான்.

'' பின்னே, ' வேண்டாம்; பெண் பிடிக்கவில்லை' என்று சொல்லிவிட்டு வேறு இடத்தில் பெண் பார்த்துப் பண்ணிக் கொள்வதுதானே!''

இப்போது இருவருமே சேர்ந்து சிரித்தனர்.

* * *

நடராஜனுக்கு வந்த தந்தியில் ''விவாகத்தை நிறுத்தவும்'' என்று இருந்தது. தொடர்ந்து ஒரு கடிதம்; அதற்குப் பின், ஒரு செக்!

லக்ஷ்மியின் புருஷனிடமிருந்து அவனது நன் பழகிய ஒரு ஜில்லா கலெக்டருக்குச் சில கடிதங்கள் சென்றன. அவன் சரஸ்வதியை வந்து பார்த்தான்... இப்படிச் சில நிகழ்ச்சிகள் நடந்தன!

கதையை வளர்த்துவானேன்! சரஸ்வதிக்கும் அந்தப் பையனுக்கும் விவாகம் வெகு விமரிசையாக நடந்தது. கல்யாணத்தின் போது சரஸ்வதி லக்ஷ்மியினிடம் சொன்னாளாம்: ''நான் ஒரு தியாகமும் பண்ணவில்லை. நீ இப்படி முடிப்பாய் என்று நிச்சயமாகத் தெரியும் எனக்கு.''

# படித்துப் பாருங்கள்!

## புதுப் பெண்

அமுதமும் பவானியும் சகோதரிகள். இளம் வயதில் தந்தையை இழந்த அவர்கள் தாயாருடன் பல கஷ்டங்களுக் குள்ளாகிறார்கள். அவர்கள் தகப்பனார் வேலை பார்த்து வந்த கிளியூர் எஸ்டேட் உரிமையாளர் சபாபதிப் பிள்ளையிடம் சமயத்தில் உதவி கோரினார்கள். அது எஸ்டேட் மானேஜர் சிவசாம்புவின் சூழ்ச்சியால் கிடைக்காமல் போகிறது. சபாபதிப் பிள்ளையின் மகன் சுந்தரம் அமுதத்தினிடம் மனத்தைப் பறி கொடுக்கிறான். அமுதம் சங்கீதம் பயின்று ரேடியோவில் பாடிப் பிரசித்தி பெற்று இசைத் தட்டிலும் பாடுகிறாள். அச்சமயம் அவளுக்குக் கார் விபத்து நேரிடுகிறது. கவலைக் கிடமான நிலையில் அவள் இருந்தபோது, சுந்தரத்தின் உண்மைக் காதலை உணர்ந்து பவானியை மணக்கும்படி கேட்டுக் கொள்கிறாள். பவானிக்கும் சுந்தரத்துக்கும் விவாகம் நடக்கிறது. இதற்கு இடையில் சிவசாம்புவின் திருவிளையாடல்கள் காரணமாகக் கதையில் பல சிக்கல்கள் சேர்ந்து விடுகின்றன. மனம் முறிந்து பவானி இறந்து விடுகிறாள். அமுதத்துக்கும் சுந்தரத்துக்கும் கல்யாணம் நடைபெறுகிறது. அக்ரமம் செய்த சிவசாம்பு தண்டனை யடைகிறான்.

எளிய இனிய தமிழில் எழுதப்பட்ட இக்கதை மிக்க விறுவிறுப்புடன் செல்கிறது.

ஆசிரியர்: வஸந்தன்; பிரசுரம்: வெண்ணிலா வெளியீடு, 118, பிராட்வே, சென்னை: விலை: ரூ.1.

## கன்னிக் குமரிப் பாடல்

பக்திப் பெருக்கில் தன்னை மறந்து நிற்கும் லயம் யாரும் எளிதில் பெறக்கூடிய நிலை அன்று. அத்தகைய அரிய நிலையை அடைந்த ஒருவர் பாடல்கள் இயற்றினாலும் அவற்றில் பக்திச் சுவை ததும்பத்தானே செய்யும்!

ஸ்ரீமதி ஜெயலக்ஷ்மி சுதர்சனம் இயற்றிய இந் நூலில் அத்தகைய பாடல்கள் சுரத்துடன் காணப்படுகின்றன.

[பிரசுரம்: குமரிப் பதிப்பகம், 17, பவழக்காரத்தெரு, சென்னை 1. விலை: ரூ. 1—4—0]

## முகையூர் நீதிபதி

இருவர் சேர்ந்து ஒரு குற்றம் செய்கின்றனர். பிறகு காலத்தின் கோளாறினால் ஒருவன் குற்றவாளி என்று கண்டுபிடிக்கப்பட்டு கைதிக் கூண்டில் ஏறுகிறான்.

மற்றவன் குற்றவாளி என்று கண்டு பிடிக்கப் படாமல், அவனைத் தண்டிக்கும் நீதிபதி யாகிறான்! நீதிபதி ஸ்தானத்தில் இருப்பவன் தனக்கு உடந்தையாக இருந்தான் என்று காட்டிக் கொடுக்கக் குற்றவாளியின் மனம் இடங் தருவதில்லை. நீதிபதியாக இருப்பவன் தன் குற்றத்தைப் பகிரங்கமாக ஒப்புக்கொள்ள துணிச்சல் ஏற்படாமல் மனச் சாட்சியின் வேதனைக்கு உள்ளாகிறான். இப்படியொரு பிரச்னையில் நியாயத்துக்கும் நேர்மைக்கும் பழுதின்றி நடந்துகொள்ளும் ஒரு நீதிபதியின் கதை இது. எழுதியவர்: கே. வி. கே.; பிரசுரம்: ஆசிரியர் நூற் பதிப்புக் கழகம், 53-56 பவழக்காரத் தெரு, சென்னை. விலை: ரூ. 3.

## மல்லிகை

முத்துப் போல மல்லிகை
  முற்றும் அழகு காட்டுதே!
நித்தம் பெண்கள் தலையிலே
  நின்று நடனம் ஆடுதே!

*

மரமே மாடே என்றெல்லாம்
  மனிதர் திட்டிக் கொல்கின்றார்
மரமும் மாடும் உதவுதல்போல்
  மனிதர் எங்கே உதவுகிறார்?

இவ்வாறு எளிய சொற்களில் துள்ளும் சந்தத்தில் செய்யுள் இயற்றும் திறம் படைத்தவர் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா. அவருடைய சில செய்யுட்களைத் தொகுத்து மேற்கண்ட தலைப்பில் வெளியிட் டிருக்கிறார்கள்.

[பிரசுரம்: தமிழ் நிலையம்; புதுக்கோட்டை; விலை: 4 அணா.]

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 52. மூல வியாதியும் தீரும்!

மூல வியாதிக்குக் காரணம் மலச்சிக்கலே. சரியான சத்துள்ள ஆகாரம் இல்லாததாலும், தேகப் பயிற்சியின்மையாலும் மலச் சிக்கல் ஏற்படுகிறது. சிலருக்கு மலச்சிக்கல் இல்லாமல் கூட மூல வியாதி ஏற்படுவதுண்டு. அதற்கு ஆகாரக் கோளாறுதான் காரணம்.

மூல வியாதியில் பலவிதம் உண்டு. ரத்த மூலம்; முளை மூலம்; உள் மூலம்; வெளி மூலம் என்பன. ரத்த மூலத்தில் ரத்தம் மலத்துடன் வரும். வலி பொறுக்க முடியாது. வேகமாய் நடக்கவும், உட்காரவும் கஷ்டமாய் இருக்கும்.

முளை மூலத்தில் சிறு சதைகள் உருண்டைகளாகவும், சிறிது நீளமாயும் வளர்ந்திருக்கும். இவற்றைத்தான் முளைகளென்பர். சிலருக்கு இவை மலத்துவாரத்திற்கு உள் பக்கங்களில் இருக்கும். இதுதான் உள்முளை மூலம். சிலருக்கு மலத் துவாரத்தின் ஓரங்களில் இருக்கும். இதுதான் வெளி மூலம். வெளி மூலம் உள்ளவர்கள் பாடு இன்னும் கஷ்டம். மலம் கழிப்பது நரக வேதனையாய் இருக்கும். வலி, குத்தல், எரிச்சல் பொறுக்காமல் துடிப்பர். சில சமயம் இந்த முளைகள் வெடித்து ஏராளமாக ரத்தம் கொட்டும்.

சிலருக்கு மூலம் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்காது. அவ்வப்போது தலை காட்டி உபத்திரவிக்கும். இவைகளுக்காக எத்தனையோ மருந்துகள், களிகள், லேகியங்கள், களிம்புகள் இருக்கின்றன. இந்த மருந்துகளை உபயோகிக்கும் வரையில் தான் குணமாய் இருக்கும்.

ஆபரேஷன் செய்யாமல் முளையை எடுத்து விடுவேன் என்பார்கள் சிலர். சிலர் மருந்துகளை வைத்துக் கட்டுவார்கள். வலி சுமாராய் இருக்கும். மூன்று, நான்கு நாட்களுக்குப் பிறகு கட்டை அவிழ்த்து, "இதோ முளை வந்துவிட்டது, பாருங்கள்" என்பார்கள். வேறொன்றுமல்ல. சீதாப் பழத்திலுள்ள கொட்டையில்லாத சுளையை முதல் நாளிலேயே சில வற்றை மருந்துடன் வைத்துக் கட்டி விடுவார்கள். அறியாத ஜனங்கள் 'ஆமாம்' என்று நம்புவர். எத்தனையோ வித மோசடிகளில் இதுவும் ஒன்று. "முளை என்பது என்ன! எப்படி உண்டாகிறது! மருந்து அதை மட்டும் எப்படித் துண்டாய் எடுத்து விடும்! அப்படிச் சதையைத் துண்டிக்கக்கூடிய சக்தி அம்மருந்துக்கு இருக்குமானால், அம்மருந்து மற்ற பக்கங்களில் கூடத் தானே பட்டிருக்கிறது. அதை ஏன் துண்டிக்க வில்லை! என்பதைப் பற்றிச் சிறிதும் சிந்திக்க மாட்டார்கள். என்னே, அறியாமை!

வைத்தியர் வந்து போன சில நாளில் மறுபடியும் முளை வலிக்க ஆரம்பிக்கும். பழைய வைத்தியரிடம் சென்றால் "மறுபடியும் முளை இருக்கிறது. கட்டுப் போடவேண்டும்" என்பார்கள்.

நம்மில் நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்காவது மலச் சிக்கல் இருக்கும். அதில் ஐம்பது பேருக்காவது மூலம் இருக்கும். இவ்வளவு பேருக்கிருக்கும் இக் கொடிய நோயை விரட்ட யாரும் சரியான மார்க்கத்தைக் கடைப் பிடிக்கக் காணோம். உண்டாகும் மார்க்க மென்ன என்பதை அறிந்து அதை விலக்குவது, பிறகு மருந்தை உபயோகித்தால் பரவாயில்லை. சில வைத்தியத்தில் பத்தியம் இருக்கச் சொல்லுவார்கள். அப் பத்தியமாவது சரிவர மற்ற சமயங்களில் கடைப் பிடித்தால் இவ் வியாதியைச் சிறிது வெல்லலாம். சிலர் மலச்சிக்கலினால் தான் இந்த வியாதி வருகிறது என்று படுக்கும்போது மாத்திரை, உப்புகள், படுக்கையை விட்டு எழுந்ததும், காப்பி, உப்புகள், சுருட்டு, பீடி, சிகரெட் மாதிரி வழக்கப் படுத்திக் கொண்டிருப்பர். இம்மாதிரி சுலபமாய் ஏதாவது சாப்பிட்டுப் பரிகாரம் தேடப்படுகிறதே தவிர, துன்பத்தின் காரணத்தை நீக்குவதில்லை.



ஆடிட்டர் ஸ்ரீ நாராயண ஐயர்

மலச்சிக்கல் எதனால் உண்டாகிறது! உஷ்ணத்தினால். உஷ்ணம் எதனால் உண்டாகிறது! ஆகாரத்தினால். நெடுநேரம் உட்கார்ந்து வேலை செய்பவர்களுக்கும், மூளை வேலை அதிக முள்ளவர்களுக்கும் மலச்சிக்கல் உண்டாவதுண்டு. இவர் பூரணமாக ஆகார சீர்திருத்தம் முதலில் செய்து கொள்ள வேண்டும். உஷ்ணமாகும் வஸ்து எது என்பதை அறிந்து விலக்க வேண்டும். முக்கியமாய் மூலத்திற்குச் சத்துரு மிளகாய். மிளகாய்ப் பேயை விரட்டினால் தான் மூலம் குணப்படும். வைத்தியத்தில் பத்தியமும் இதைத்தான் சொல்லுவார்கள். மிளகாயின் ரஸம், அதன் காரச் சத்து குடலைக் கெடுத்து விடுகிறது. மலச்சிக்கல் உண்டாவதற்கும் அதுவே முக்கிய காரணம். மூல முளை



"என்ன செட்டியார்வாள், பையனையே தராசில் வைத்து நிறுக்கிறீர்களே, என்னத்துக்காக?"

"அதுவா? இந்தப் பையனை அரை வீசை நெய் வாங்கிக் கொண்டுவரச் சொன்னேன். நெய் ஜாடியை நிறுத்துப் பார்த்ததில் பத்துப் பலம் குறைவாயிருந்தது. அதனால் பையனை நிறுக்கிறேன்!"

வர்கள், சிறிது மிளகாயை அதிகமாய்ச் சேர்த்துக் கொண்டாலும், ஆசன வாய் எரியும். காற்று அந்த இடத்தில் படுவதால் நமக்கு எரிச்சல் தெரிகிறது. உள்ளே என்னமாய் எரியும் என்று நமக்குத் தெரிவதில்லை. எப்படி ரத்த நரம்புகளை அழிக்கிறது, புண்படச் செய்கிறது தெரியுமா! அதனால்தான் மலத்துடன் ரத்தம் வருகிறது.

முதலில், உடல் உஷ்ணமானால் மலத் துவாரம் இறுகி இறுக்கும். அதனால் மலம் இறங்கும் போது வெடிப்புகள் ஏற்பட்டு இரத்தம் வருகிறது. மலத் துவாரத்தில் மலம் வந்து தங்கி உலர்ந்து கட்டிகளாய்க் கட்டிவிடும். அப்பொழுது அதன் சுவர்கள் அதை அணைத்திருப்பதால், அம்மலச் சந்துகளில் கூட அத்துடன் சதைகள் சேர்ந்திருக்கும். அப்படி நீண்ட நாள் மலச்சிக்கல் ஏற்பட்டு இருந்தால், அச்சதைகள் அச்சந்துகளிலுள்ளபடி உருவம் அமைந்து சதைகள் அப்படியே நின்று விடுகிறது. உஷ்ணம் ஆகும் போது அவைகளில் ரத்தம் தேங்கி வெளி வர முடியாமல், வீங்கி, வலியும், குத்தலும் எடுக்கிறது. அதை ஆபரேஷன் செய்து எடுத்தால் தவிர வேறு மார்க்கமில்லை. ஆனால் சர்வாங்காசனத்தில் அந்த ஆபரேஷன் இன்றியே இயற்கையாய்ச் சுகமாக வழியுண்டு. பலவித மூல முள்ளவர்கள் சர்வாங்காசனத்தைச் செய்து குணம் அடைந்திருக்கிறார்கள்.

ஆசனங்களில் எல்லாவற்றிலுமே மலச்சிக்கலைத் தடுக்க வழியுண்டு ஆனால் சர்வாங்காசனத்தில் அதன் தடுப்புக் குணம் விசேஷமாய் அமைந்திருக்கிறது. மலச்சிக்கலைத் தடுப்பதுடன், மூலத்தையும் போக்கடிக்கிறது. பல வருடங்கள் மூல வியாதியால் கஷ்டப்பட்டு, தீராமல் கஷ்டப்பட்டவர்கள் சுகமடைந்திருக்கிறார்கள்.

சர்வாங்காசனத்தில் பூமியின் ஆகர்ஷண சக்தி மலத் துவாரத்திலுள்ள முளைகளிலுள்ள ரத்தத்தை இழுத்து, அப்புறப்படுத்தி சாந்தி அளிக்கிறது. மலக் குடலைச் சுற்றி இருக்கும் பொடி, ரத்த நாளங்களும் விச்ராந்தி அடைகிறது. நாளுக்கு நாள் குணமடைந்து ரத்த மூலம் மறைகிறது. வளர்ந்த மூல முளைகள் பூரணமாய் மறைய வேண்டுமானால் ஆபரேஷனே மார்க்கம்.

ஆகார விஷயத்தில் பத்தியம் வேண்டும். கஷ்டமான பத்தியமல்ல. அதிக காரம் சேர்க்கக் கூடாது, தயிர், பால், மோர், வெண்ணெய் கீரையைச் சாப்பிட வேண்டும். அரிசியில் தவிடு நீக்காமல், கஞ்சி வடிக்காத சாதம் நல்லது. கீரைக் காய்கறி, கீரைகள், தவிடு எடுக்காத கோதுமை ரொட்டி முதலியவை சாப்பிடுவது நல்லது.

சென்னை நகரின் பிரபல ஆடிட்டர்களில் ஒருவர் ஸ்ரீ டி. எஸ். நாராயண ஐயர். நல்ல செல்வந்தர். அவருடைய சர்வாங்காசனப் படம்தான் இந்தக் கட்டுரையில் பிரசுரித்திருப்பது. அவர் அனுபவ பூர்வமாக எழுதியிருக்கும் கடிதத்தைப் பாருங்கள்.

ஸ்ரீ குமாரஸ்வாமி அவர்களுக்கு,

'கல்கி'யில் தாங்கள் எழுதும் ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளைப் படிக்க ஆரம்பித்ததும், எனக்கும் ஆசனங்களைப் போட்டுப் பழக வேண்டும் என்று ஆசை பிறந்தது. ஆகவே சென்ற வருடம் அக்டோபர் மாத முதல் ஆசனங்கள் போட ஆரம்பித்தேன். சிறு வயதிலிருந்தே என்னை வாட்டி வந்த ரத்த மூலம் நீங்கி நான் இப்பொழுது சுகமாய் இருக்கிறேன்.

எனக்கு இந்த மூல நோய் ஐந்து வயதிலேயே ஆரம்பமானது. முளைகள் பல உண்டாகி மலம் போகும் போது வெளியில் வந்து விடும். மூச்சைப் பிடித்து உள்ளுக்கு இழுத்தால் தான் உள்ளே போகும். சில சமயம் கை விரல்களை உபயோகித்தால் தான் முளை உள்ளே போகும். நாளுக்கு நாள் இது அபிவிருத்தியாகி முற்றி இரத்தம் வர ஆரம்பித்தது. வரவர இரத்தம் பீறிட்டுக் கொண்டும் வந்தது.

இதைப் போக்க எத்தனையோ முயற்சிகள் செய்தேன். ஆங்கில டாக்டர்களிடம் பலவித மருந்துகள், மாத்திரைகள், ஊசிகள், களிம்புகள் முதலியவைகளால் இந்த நோயைத் தீர்க்க முயற்சித்தேன். ஆபரேஷன் செய்தால்தான் முடியும் என்றனர். கடைசியில் என் நெருங்கிய நண்பரான ஒரு ஆங்கிலேய டாக்டரிடம் ஆபரேஷனுக்குச் சென்றேன். அவர் "ஆபரேஷன் செய்தாலும், பிறகு இந்த நோய் வராது என்பது நிச்சயமில்லை" என்றார். பிறகு ஆயுர்வேத, யூனானி மருந்துகளையும் உபயோகித்துத் தீர்த்தேன். பலனில்லை.

பிறகு தான் நான் சென்ற அக்டோபரில் ஆசனங்கள் போட ஆரம்பித்தேன். நான் தற்போது செய்யும் ஆசனங்கள்; புஜங்காசனம் மூன்று தடவை, சலபாசனம் மூன்று தடவை, தனுராசனம் மூன்று தடவை, சர்வாங்காசனம் இருபது நிமிஷங்கள், மத்ஸ்யாசனம் நான்கு நிமிஷங்கள், யோகமுத்ரா ஆறு தடவை, சாந்தி ஆசனம் பத்து நிமிஷங்கள். இவைகள் முடிந்த பிறகு பிராணாயாமம் ஐந்து நிமிஷங்களும், தியானம் பத்து நிமிஷங்களும் செய்கிறேன். இவைகளுடன் காபி, டீ விலக்கி இரண்டு வேளை ஆகாரத்துக்கிடையில் மிக எளிய சிற்றுண்டியும் சாப்பிடுகிறேன். சில சமயம் இளநீரும் சாப்பிடுகிறேன். இவைகளால் எனக்கிருந்த ரத்த மூலம் அறவே அகன்று மலச்சிக்கல் இல்லாமல் சுகமாயிருக்கிறேன். வேலையில் சுறுசுறுப்பும் உற்சாகமும் உண்டாகியிருக்கிறது. இவ்வளவும் இந்த ஆசனங்களினால் என்றேதான் நம்புகிறேன்.

தியாகராஜநகர்  இப்படிக்கு,
சென்னை  டி. எஸ். நாராயண ஐயர்



# கனகாவின் கவலை

பி.எஸ்.மணி

கனகா முதலில் வக்கீல் ராகவனைச் சந்தித்த பொழுது அவனது கலகலப்பான பேச்சும், களையான முகமும் அவளை அப்படியே ஆகர்ஷித்து விட்டன. மேலும் அவன் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவன் ; அதோடு மட்டுமல்ல, பெருஞ் செல்வமும் அவனை அடைக்கலம் அடைந்திருந்தது.

அவளுடைய ஆசை வீண் போகவில்லை. கடைசியில் ராகவனுக்கும் கனகாவுக்குமே கல்யாணமாயிற்று. கனகாவுக்குத் தன் கணவன் ராகவனை விட அழகும் புத்திசாலித் தனமும் உள்ளவர்கள் இவ்வுலகில் இல்லை என்பது திடமான அபிப்பிராயம். அவள் தன் சிநேகிதைகளிடம் பேசும்போதெல்லாம், "அவர் எப்பொழுது பார்த்தாலும் சட்டப் புத்தகமும் கையுமாகத்தானிருப்பார். வாயில் ஈ புகுந்தால் கூடத் தெரியாது. சாப்பிடக் கூட நாலைந்துதரம் கூப்பிட்டால்தான் வருவார்" என்று கூறிப் பெருமை யடித்துக் கொள்வாள்.

அன்று கனகா தன் கணவனுடைய ஆடைகளை யெல்லாம் வண்ணானுக்குப் போட்ட பிறகு சமையல்காரன் சமையல் எல்லாம் சரியாகச் செய்திருக்கிறானா என்று பார்ப்பதற்காகச் சென்றாள்.

அச் சமயத்தில் "கனகா !" என்று அவள் கணவன் கூப்பிடுவது கேட்டது.

கனகா தன் கணவன் ராகவனின் குரல் கேட்டுத் திரும்பி வந்தாள்.

"இன்றைக்கு என் துணிகளையெல்லாம் எடுத்து வண்ணானுக்குப் போட்டாயா !"

"ஆம்!" என்று தயக்கத்துடன் பதிலளித்தாள்.

"சரி ! என் கால் சட்டைப் பையிலிருந்து ஏதாவது காகிதங்களை எடுத்தாயா !" என்று கேட்டான் ராகவன் சந்தேகத்தோடு.

"இல்லையே ! நான் கால் சட்டைப் பையைப் பார்க்கவில்லையே !" என்றாள் பதட்டத்துடன்.

"அதில் சில முக்கியமான கடிதங்கள் இருந்தன. அவற்றை......!" என்று நிறுத்தினான் வக்கீல் ராகவன். அவன் முகத்தில் சிறிது பயமும் தோன்றியது.

"வேலைக்காரனை அனுப்பி அந்தக் கடிதங்கள் இருக்கின்றனவா என்று பார்த்துவரச் சொல்லட்டுமா !" என்று கேட்டாள் கனகா.

"வேண்டாம், வேண்டாம் ! நானே கோர்ட்டுக்குப் போகும் வழியில் அவனைப் பார்த்து வாங்கிக் கொள்ளுகிறேன். நீ கவலைப்பட வேண்டாம்" என்றான் ராகவன் தடுமாறிக் கொண்டே.

ராகவன் கோர்ட்டுக்குப் போன பிறகு கனகாவுக்கு மனசே சரியாக இல்லை. "வண்ணானிடமிருந்து அந்தக் கடிதங்கள் கிடைத்து விடுமா !" என்று நினைத்தபடியே உட்கார்ந்திருந்தாள்.

இச் சமயத்தில் வாசலில் யாரோ கூப்பிடும் குரல் கேட்டது. கனகா வாசலை நோக்கி விரைந்தாள்.

வண்ணான் கையில் ஏதோ இரண்டு மூன்று கடிதங்களுடன் நின்று கொண்டிருந்தான். "அம்மா! ஐயா கால் சட்டையிலே இந்தக் காகிதங்கள் இருந்துதுங்க. அதை அப்படியே எடுத்துக்கிட்டு ஓடி வந்தேனுங்க..." என்று கடிதத்தைக் கொடுத்து விட்டுத் திரும்பினான்.

கனகா அவசர அவசரமாக அவன் கொடுத்த கடிதங்களை வாங்கிக் கொண்டு உள்ளே சென்றாள். ஆவலுடன் கடிதங்களைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள் :

"நமஸ்காரம். தங்கள் கடிதம் கிடைத்தது. இந்த ஏழைக்காகத் தாங்கள் புரியும் தியாகம் அளவிட முடியாது. தங்கள் அன்புக்கும் பெருந்தன்மைக்கும் நன்றி. தயவு செய்து இன்றைக்கு என்னை வந்து சந்திக்க வேண்டுகிறேன்.

பத்மா."

'என் அருமைக் கணவர் ! அவரோடு மற்றொரு பெண்ணா ! அது கற்பனைதானா ! இல்லை, இல்லவே இல்லை ! ஏன் இருக்கக் கூடாது ! இல்லாவிட்டால் காலையில் இந்தக் கடிதங்கள் தொலைந்ததற்காக அவ்வளவு பதட்டம் அடைவாரா! தாமே இந்தக் கடிதங்களை நேரில் வாங்கிக் கொள்ளுகிறேன் என்று சொன்னாரே! கடிதங்களை நான் எங்கே படித்து விடுவேனோ என்ற பயம் போலும்.'

வெகு நேரம் வரையில் கனகா அந்தக் கடிதங்களைப் பற்றிச் சிந்தித்தபடியே படுக்கையில் படுத்துக் கிடந்தாள். பலப்பல பயங்கரக் காட்சிகள் தோன்றி அவள் மனத்தை கிலேசமடையச் செய்தன. ராகவன் வந்ததும் அவர் முன் அந்தக் கடிதத்தை வீசி யெறிந்து மனத்திலுள்ள குறைகளை யெல்லாம் அப்படியே கொட்டி விட வேண்டுமென்று நினைத்தாள். அந்தக் கடிதங்களை அவன் மேஜையின்மீது வைத்தாள்.

பிறகு டெலிபோன் ரிஸீவரை எடுத்துத் தன் கணவரைக் கூப்பிட்டுக் கடிதங்கள் பத்திரமாக இருக்கிறது என்பதைத் தெரிவிக்க விரும்பினாள். டெலிபோனில் ராகவனைக் கூப்பிட்ட போது "ஐயா ! கோர்ட்டுக்கு வந்து விட்டு அவசரமாக எங்கேயோ வெளியிலே போயிருக்காங்க. ஏதாவது சொல்லணுமா !" என்று பவ்யமாகக் கேட்டான் ராகவனுடைய குமாஸ்தா.

"ஒன்று மில்லை..." என்று சொல்லிவிட்டு 'டக்' கென்று டெலிபோன் ரிஸீவரைக் கீழே வைத்தாள். அவர் எங்கே போயிருப்பார் ! ஒரு வேளை அந்தக் கடிதம் எழுதிய பெண்ணின் வீட்டுக்குப் போயிருப்பாரோ !

இந்த எண்ணம் தோன்றியதும் அவளுக்கு உடம்பை என்னவோ செய்தது. இதற்கு முன் அவள் இத்தகைய பயங்கர அநுபவங்களை யெல்லாம் அநுபவித்ததில்லை.

அன்றிரவு வெகு நேரம் கழித்தே வக்கீல் ராகவன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். வந்தவன் எதிரே நின்ற கனகாவைச் சிறிதும் பொருட்படுத்தாது தனது அறையினுள் சென்றான். கனகாவுக்கு அது மிகுந்த ஆயாசத்தைத்தான் அளித்தது. இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாது மலர்ந்த முகத்துடன் அவனைப் பின் தொடர்ந்தாள்.

"என்ன ! நான் உங்களுக்குப் போன் பண்ணினேன், கடிதங்கள் அகப்பட்டு விட்டன என்று சொல்லுவதற்காக. கூப்பிட்ட போது நீங்கள் இல்லையே !" என்றாள் கனகா.

"ஓஹோ ! அப்படியா !" என்று கூறிவிட்டுக் கடிதங்களை வாங்கிப் பத்திரமாகத் தனது பீரோவில் வைத்துப் பூட்டினான்.

ராகவன் நேரடியாகப் பதிலளிக்காதது அவளது வீண் சந்தேகத்துக்குத் தூபம் போட்டது போலாயிற்று.

அதற்குப் பிறகு ராகவனின் காரியங்கள் எல்லாம் தவறுதலாகப் பட்டு அவளுக்கு மிகுந்த கலவரத்தை வளர்த்தது. அவள் நிலை கழைக் கூத்தாடி ஒருவன் கம்பியில் பயந்து கொண்டே நடப்பானே அது போலிருந்தது. ஒவ்வொரு தடவை ராகவனைப் பார்க்கும்போதும் கனகாவின் கண்கள் சந்தேகத்தோடு ஆராய ஆரம்பித்தன.

• • •

ஒரு நாள் மாலை ஐந்து மணி யிருக்கும். ராகவன் அப்பொழுதுதான் கோர்ட்டிலிருந்து வந்து தனது அலங்கார உடைகளைக் களைந்து கொண்டிருந்தான். கனகா அவனுக்குக் காப்பியும் டிபனும் எடுத்துக் கொண்டு அவன் அறையை நோக்கி வந்தாள். வரும் வழியில் தயங்கியபடியே நிற்கும் வேலைக்காரனைப் பார்த்ததும், "என்ன! உனக்கு என்ன வேண்டும்!" என்று வினவினாள் கனகா.

"அம்மா! ஐயாவைத் தேடிக்கிட்டு ஒரு அம்மா வந்து வாசலிலே காத்திருக்காங்க. ஐயாவைப் பார்க்கணுமாம்" என்றான் வேலைக்காரன்.

வேலைக்காரன் யாரோ ஒரு பெண் ராகவனைத் தேடி வந்திருக்கிறாள் என்றதும் கனகாவுக்குப் பக்கென்றது. யாராயிருக்கும்! ஒரு வேளை அந்தக் கடிதம் எழுதிய பெண்ணாயிருக்குமோ!

"இந்தாப்பா! 'ஐயா வெளியிலே போயிருக்காங்க, வர நாழியாகும்' என்று சொல்லி அனுப்பிவிடு" என்று படபடப்புடன் கூறித் தன் கணவர் இருக்குமிடம் நோக்கி விரைந்தாள். மனமறிந்து ஒரு பொய் சொல்லியதை அவள் நெஞ்சம் இடித்துக் காட்டியது.

தயங்கியபடியே டிபன் தட்டுடன் உள்ளே நுழைந்த கனகாவை உற்சாகத்துடன் வரவேற்றான் ராகவன். ஆனால் கனகா கவலை தோய்ந்த முகத்துடன் நிற்பதைக் கண்டு, "என்ன கனகா! ஒரு மாதிரி யிருக்கிறாய்" என்று கேட்டான் வக்கீல் ராகவன்.

"ஒன்றுமில்லை" என்று கூறி அவள் முகத்தில் வேண்டுமென்றே புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "இந்தாருங்கள். டிபனைச் சாப்பிடுங்கள்" என்றாள்.

ராகவன் பட்சணத்தை ருசி பார்த்துக் கொண்டே, "என்ன கனகா! நான் ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் சொல்கிறாயா!" என்று கேட்டான்.

"ஆகட்டும்" என்று தலையசைத்தாள் அவள்.

"கனகா! ஒருவன் ஒரு பெண்ணைத் தள்ளிவைத்து விட்டு மறு கல்யாணம் செய்து கொள்ள நினைக்கிறான். அவனைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்!" என்று கேட்டான் வக்கீல் ராகவன்.

ராகவனுடைய திடீர்க் கேள்வி அவளைத் தூக்கிவாரிப் போடச் செய்தது. 'என்ன! என்னைத் தள்ளி வைத்து விட்டு அவர் வேறு கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாரா! அதற்குத்தான் இப்படி பூர்வ பீடிகை போடுகிறாரோ!' என்ற எண்ணம் எழுந்ததும் அவளுடைய மனம் தீயிலிட்ட புழுப் போல் துடித்தது. 'ஓஹோ! அதற்குத்தான் அந்தப் பெண் இங்கே வந்திருக்கிறாள் போலும்!' என்ற சிந்தனை தோன்றியதும் அவள் துக்கம் எல்லை மீறியது. தன் கணவன் மீது தோன்றியுள்ள சந்தேகங்களை யெல்லாம் அப்படியே கொட்டிவிடுவதென்று தீர்மானித்தாள். ஆனால் அவள் வாயிலிருந்து வார்த்தைகள் வெளி வந்தால்தானே!

பேசாமடந்தையாய் எதிரில் தலை குனிந்தபடி நிற்கும் கனகாவைப் பார்த்து ராகவன் "என்ன கனகா! பேசாமலிருக்கிறாய்! நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல மாட்டாயா!" என்றான்.

இச் சமயத்தில் வேலைக்காரி முனியம்மாள் அவர்களிருக்கும் அறையில் நுழைந்து, "ஐயா! உங்களைத் தேடிக்கிட்டு ஒரு அம்மா வந்து வாசலிலே காத்திருக்காங்க. உங்களைப் பார்க்கணுமாம்" என்றாள்.

"ஓஹோ! அந்தப் பெண் வந்திருக்கிறாளா! இதோ, வந்து விட்டேன்" என்று கூறிக் கொண்டே ராகவன் அங்கிருந்து சென்றான். அவளுக்குத் தன்னிடமிருந்து உயிரை யாரோ பிரித்துச் செல்வதைப் போலிருந்தது. அப்படியே திக்பிரமை பிடித்துத் திகைத்துப் போய் நின்றாள்.

அவள் மனத்தை எவ்வளவோ தேற்றிக் கொள்ள முயற்சி செய்தாள். பிறந்தகத்துக்கு ஓடிப் போய்விடலாமா என்று கூடத் தோன்றியது. 'அப்படிப் போனால் யாருக்கு அவமானம்! நமக்குத்தானே! வேண்டாம்! நாம் எப்படியாவது அவர் மனத்தைத் திருப்ப முயல வேண்டும்' என்று தீர்மானித்தாள்.

அப்பொழுதே சென்று அவள் தன்னை அலங்கரித்துக் கொள்ளலானாள். அவள் தன்னைக் கண்ணாடியில் பார்த்தபோதுதான் அவளது அலங்கோலமான நிலை தெரிந்தது. தலை வாராமல் கலைந்தபடி கிடந்தது. தன்னை அலங்காரப் படுத்திக் கொள்வதை அசட்டை செய்திருந்தாள்.






“என்னய்யா! நீங்க இப்படி வெட்டு ஒன்று துண்டு ரெண்டா பேசறீங்களே, இது நியாயமா?”

---

அதோடு ராகவனையும் அசட்டை செய்ததினால் ஏற்பட்ட விளைவு!......அன்பும் ஆசையும் நிறைந்த தன் கணவனையே இழக்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது! இனிமேல் அவ்வாறு அசட்டையாக இருக்கக் கூடாது! கூடவே கூடாது......

கேட்பாரற்றுக் கிடந்த பவுடர், ஸ்னோ டப்பாக்களுக்கெல்லாம் யோகம் பிறந்தது. அழகு படுத்திக் கொள்வதைப் பற்றி வரும் கட்டுரைகளைப் பத்திரிகைகளில் விடாமல் படிக்கத் தொடங்கினாள். ராகவனுக்குப் பிடித்தமான விஷயங்களையெல்லாம் நினைவு படுத்திக் கொண்டு அதைக் காரியத்தில் நிறைவேற்ற முனைந்தாள். இதையெல்லாம் ராகவன் முதலில் கவனிக்கவில்லை. அதைக் கண்டு மிகவும் வருத்தமுற்றாள். இருந்தாலும் அவள் இடைவிடாமல் செய்து வரவே அவளுடைய மாறுதலுக்கும் பலன் விளையாமல் போகவில்லை.

அதற்குப் பிறகு ராகவனிடம் நல்ல மாறுதல் இருந்ததை அவள் கவனித்தாள். ராகவன் இப்பொழுதெல்லாம் மாலையில் சீக்கிரமே வீட்டுக்கு வந்து விடுகிறான். ஒருநாள் அவளுக்குத் தலையில் வைத்துக் கொள்ள நிறைய புஷ்பங்கள் வாங்கி வந்தான். அன்பும் ஆசையும் ததும்ப அவன் பேசத் தொடங்கவே கனகா தன் கவலைகளையெல்லாம் ஒருவாறு மறந்து விட்டாள். அவரை மயக்கியிருந்த பெண்ணினிடமிருந்து அவரை விடுவித்து விட்டோம் என்பதில் கனகாவுக்கு ஒரே பூரிப்பு. அதில் அவள் என்றும் அடைந்திராத ஆனந்தத்தை எய்தினாள். அந்த ஆனந்தத்தில் பழைய கசப்பைக் கூடச் சிறிது மறந்திருந்தாள்.

இருந்தாலும் கொய்னா மாத்திரையைச் சாப்பிட்டவளுக்கு இடை இடையில் அதன் கசப்புத் தோன்றி மறைவதைப் போல் அவளுக்கு அந்தச் சம்பவம் தோன்றாமலில்லை.

அன்று தீபாவளி. வக்கீல் ராகவன் புத்தாடை புனைந்து கையில் அன்றையப் பத்திரிகையை வைத்துப் புரட்டிக் கொண்டிருந்தான். பட்டாடை அணிந்து பரம அலங்கார பூஷிதையாக விளங்கிய போதிலும் அவள் மனத்திலுள்ள குறையினால் முகம் வாடியிருப்பது நன்றாய்த் தெரிந்தது.

“கனகா! இன்றையப் பத்திரிகையில் வந்திருக்கும் செய்தியைப் படித்துப் பார். நான் எடுத்துக் கொண்ட வழக்கு ஜெயித்து விட்டது. அன்றைக்கு நீ அந்தக் கடிதங்களைப் பத்திரமாக வைத்திருந்ததால் தான் அந்த வழக்கு ஜெயித்தது. இல்லாவிட்டால்.............!” என்றான் ராகவன் உணர்ச்சி பொங்க.

அந்தக் கடிதத்தைப் பற்றி ராகவன் பிரஸ்தாபித்ததும் அவள், “என்ன! அந்தக் கடிதத்துக்கும் வழக்கு ஜெயிப்பதற்கும் என்ன சம்பந்தம்! ஒன்றும் புரியவில்லையே. விவரமாகச் சொல்லுங்கள்!” என்று ஆவலுடன் கேட்டாள்.

“கனகா! அன்றைக்கு ஒரு பெண் என்னைத் தேடி வரவில்லையா! அவள் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவள். அவள் கணவன் தாயாரின் விருப்பத்துக்கு மாறாக அந்தப் பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டான். அவன் தாயாருக்கு அவன் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டது பிடிக்கவில்லை. தாயாருடைய வற்புறுத்தலினால் அந்த ஏழைப் பெண்ணைத் தள்ளி வைத்து விட்டு மறு கல்யாணம் செய்து கொள்ள இசைந்து விட்டான். அந்த ஏழைப் பெண் அதைக் கேட்டு வருத்தமுற்றுத் தன் தகப்பனாரின் வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டாள். அவர் அந்தக் குடும்பத்தின் மீது ஜீவனாம்ச வழக்குத் தொடருவதற்காக என்னிடம் வந்தார். ஆனால் அந்தப் பெண்ணுக்குத் தன் கணவன் மீது வழக்குத் தொடருவது பிடிக்கவில்லை. அவள் எனக்குக் கடிதமெழுதி வீட்டுக்கு வரச் சொல்லி வழக்குத் தொடர வேண்டாமென்று வேண்டிக் கொண்டாள்...”

“ஆமாம்! அந்தப் பெண் எழுதிய கடிதாசு தொலைந்ததற்காகவா அன்று அவ்வளவு பதட்டமும், பரபரப்பும் அடைந்தீர்கள்” என்று இடைமறித்துக் கேட்டாள் கனகா.

“இல்லை, இல்லை. அந்தக் கடிதம் தொலைந்தால் என்ன! அந்தக் கடிதத்தோடு மற்றும் இரண்டு கடிதாசுகள் இருந்தன. அவையிரண்டும் அவள் கணவன் அவளுக்கு எழுதிய காதல் கடிதங்கள். அவள் கணவன் விருப்பத்திற்கு மாறாகத் தன் பெற்றோர்களின் வற்புறுத்தலினால் கல்யாணம் செய்து கொண்டேன் என்று வாதாடிய போது, இந்தக் கடிதங்களினால்தான் அவன் இந்தப் பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டான் என்பதை நிரூபிக்க முடிந்தது. அவளுக்கு ஜீவனாம்சம் தர கோர்ட்டும் தீர்ப்பளித்து விட்டது” என்று கூறி முடித்தான் வக்கீல் ராகவன்.

‘அப்பாடா!’ என்று நீண்ட பெருமூச்சு விட்டாள் கனகா. அவள் மனத்தை வாட்டிக் கொண்டிருந்த சந்தேகப் பேய் அப்பொழுதே அகன்றது. அவள் உள்ளத்தை இடைவிடாமல் அரித்துக் கொண்டிருந்த கவலைகளெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன. தன் கணவன்மீது தோன்றிய சந்தேகங்களெல்லாம் ஆதாரமற்றவை என்றறிந்ததும் அவள் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது.

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## எகிப்து – 9

**1936**-ம் வருஷம் பிரிட்டிஷ் - எகிப்து உடன்படிக்கை ஏற்பட்டபின் ஐரோப்பா கண்டத்தைப் போர் மேகங்கள் கவிந்து கொள்ளத் தொடங்கின.

இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமானபின் எகிப்தின் மீது ஜெர்மன் துருப்புகள் படையெடுத்தன. ஆசியா நாடுகளுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் பிரிட்டிஷ் கப்பல்கள் செல்ல முடியாமல் சூயஸ் கால்வாயைக் கைப்பற்றி விடவேண்டும் என்பதே ஜெர்மன் படையெடுப்பின் நோக்கமாகும்.

அங்கு ஜெர்மன் துருப்புகளுக்கும் பிரிட்டிஷ் துருப்புகளுக்கும் இரண்டு வருஷ காலத்துக்குமேல் கோர யுத்தம் நடந்தது. இறுதியில் பிரிட்டிஷ் துருப்புகளே வெற்றி பெற்றதால், பிரிட்டிஷ் கப்பல் போக்குவரத்தின் உயிர் நாடியான சூயஸ் கால்வாய் ஜெர்மானியர்களின் கையில் சிக்காமல் தப்பியது.

உலக மகா யுத்தத்தை யொட்டிச் சகல நாடுகளும் தீவிர கவனம் செலுத்தி வந்தாலும், யுத்தகாலத்தில் பிரிட்டனும் எகிப்தும் ஒத்துழைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதாலும் பிரிட்டிஷ் - எகிப்து தகராறு தாற்காலிகமாக நின்றிருந்தது.

எனினும் இரு நாடுகளுக்கும் ஏற்கெனவே இருந்துவந்த பிணக்கு இரண்டாவது மகா யுத்தம் முடிந்ததும் மறுபடியும் தலைதூக்கி இன்று மிகவும் மோசமான கட்டத்தை அடைந்திருக்கிறது.

1. எகிப்தில் உள்ள அன்னிய நாட்டுத் துருப்புகள் எல்லாம் கால தாமதமின்றி வாபஸாகிவிட வேண்டும்.

2. எகிப்தும் சூடானும் ஐக்கியம் அடைவதற்குக் குறுக்காக எந்த நாடும் எந்த ஒப்பந்தமும் நிற்கக் கூடாது.

இவைதான் எகிப்து சர்க்கார் விடுத்துள்ள முக்கியமான கோரிக்கைகள்.

சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்துக்குப் பாதுகாப்பாகத் தங்கள் துருப்புகளை வைத்திருப்பதாய்ப் பிரிட்டிஷ் சர்க்கார் கூறுகிறார்கள். "சூயஸ் கால்வாயைப் பாதுகாத்துக் கொள்ளும் சக்தி எங்களுக்கு இருக்கிறது. எனவே அந்தப் பிரதேசத்தில் உள்ள பிரிட்டிஷ் துருப்புகள் வெளியேறி விடவேண்டும்" என்று எகிப்து சர்க்கார் கூறுகிறார்கள்.

சூடான் பிரதேசத்தில் பிரிட்டிஷாரின் அதிகாரம் இருக்கக் கூடாது என்றும், எகிப்து - சூடான் ஐக்கியத்துக்குப் பிரிட்டன் குறுக்காக நிற்கக் கூடாது என்றும் எகிப்தியர்கள் எச்சரிக்கிறார்கள்.

1936-ம் வருஷத்திலே உலகத்தை யுத்த மேகங்கள் கவிந்து கொண்டிருந்தது அல்லவா? அந்த நெருக்கடியான நிலைமையை உத்தேசித்தே அந்த வருஷத்தில் பிரிட்டனுடன் உடன்படிக்கை செய்துகொள்ள இசைந்ததாக இப்போது எகிப்து சர்க்கார் கூறுகின்றனர். யுத்தம் முடிந்து ஐந்து வருஷங்கள் ஆகிவிட்டதால், இனி அந்த உடன்படிக்கையை அமுலில் வைத்துக் கொண்டிருப்பது அர்த்தமற்றது. நேர்மையற்ற காரியம் என்பதே அவர்களின் வாதம்.

பிரிட்டிஷ்—எகிப்து உடன்படிக்கையை ரத்து செய்வதற்கு முதல்படியாக சூயஸ் கால்வாயில் கப்பல்கள் போவதைத் தடுக்க எகிப்து சர்க்கார் முற்பட்டிருக்கின்றனர். மேற்படி தடையை அகற்ற வேண்டும் என்று ஐக்கிய நாடுகள் சபை விடுத்த உத்தரவை எகிப்து நிராகரித்து விட்டது. அது மாத்திரமல்ல, எகிப்தின் கோரிக்கைகளைப் பிரிட்டன் அங்கீகரிக்காவிடில், இரு நாடுகளுக்கும் உள்ள உடன்படிக்கையை ரத்து செய்வதோடு ருஷ்யாவுடன் இராணுவ உடன்படிக்கை செய்து கொள்ளும்படி நேரும் என்றும் எகிப்து அறிவித்திருக்கிறது.

எனவே மத்திய கேந்திர நாடுகளான ஈரானிலும் எகிப்திலும் பிரிட்டனுக்கு விரோதமாக ஏற்பட்டுள்ள நிலைமை எதில் வந்து முடியுமோ?

ஜனநாயகத்தின் முக்கிய அம்சங்களான பார்லிமெண்டும் மந்திரி சபையும் எகிப்தில் உண்டு என்றாலும், அங்கு இன்றும் மன்னரே மிகுந்த செல்வாக்குடன் விளங்கி வருகிறார். இன்று கூட எகிப்து மன்னர் விரும்பினால் மந்திரிகளைத் தம் இஷ்டப்படி விலக்கி விட்டு வேறு மந்திரிகளை நியமிக்க முடியும்.



மன்னர் பரூக்

இந்தியாவில் தேசிய காங்கிரஸ் மகா சபையை எதிர்த்து நிற்கக் கூடிய பலம் பொருந்திய கட்சி இல்லை அல்லவா? அது போலவே எகிப்திலும் வப்துக் கட்சிக்குச் சவால் விடுக்கக் கூடிய பலம் பொருந்திய எதிர்க்கட்சி எதுவும் இப்போது இல்லை.

அந்த நாட்டில் மதவெறி கொண்ட அதாவது இஸ்லாம் மதத்தை அடிப்படையாகக்

கொண்ட சர்க்கார் அமைய வேண்டும் என்ற கொள்கையை ஆதரிக்கும் கோஷ்டியினரும் இருக்கிறார்கள்.

சுதந்திரம் பெற்ற வேறு எந்த நாட்டிலும் காண முடியாத ஒரு நிலைமையை எகிப்தில் காணலாம். அதாவது அந்த நாட்டில் உள்ள தொழில் துறைகளில் எகிப்தியர்களைக் காட்டிலும் அன்னிய நாட்டினர் அதிகச் செல்வாக்குடன் விளங்கி வருகிறார்கள்.



ராணி நாரிமன்

எகிப்தில் உள்ள பிரபல ஹோட்டல்கள் அன்னிய நாட்டினரின் நிர்வாகத்தில் தான் இருக்கின்றன. வர்த்தகத் துறையிலும் வெளி நாட்டினரே முக்கிய ஸ்தானத்தை வகித்து வருகிறார்கள். பருத்தி வியாபாரம் எகிப்தில் உள்ள கிரேக்கர்களின் கையில் இருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

எகிப்தில் உள்ள நிலங்களில் பத்தில் ஒரு மடங்குக்கு அன்னியக் கம்பெனிகளே சொந்தக்காரர்களாக இருந்து வருகிறார்கள்.

இத்தகைய நிலைமையில் எகிப்தைப் பூரண சுதந்திரம் பெற்ற ஒரு நாடு என்று யாராவது கூற முடியுமா?

சுமார் நாலு லட்சம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ள எகிப்தில் மூன்றே முக்கால் கோடி ஜனங்களுக்கு மேல் வசிக்கிறார்கள்.

எகிப்தியர்கள் விவசாயத்தையே முக்கிய தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். எகிப்தில் பெரும் பகுதியும் மழையைக் கண்டிராத பாலைவனப் பிரதேசமாய் இருக்கிறது. அப்படியிருந்தும் அது விவசாயம் மிகுந்த பிரதேசமாக இருப்பதற்குக் காரணம், உலக அதிசயங்களில் ஒன்றான நைல் நதிதான்.

எகிப்தில் நைல் நதியின் இரு கரைகளையும் அடுத்துள்ள பிரதேசங்கள் மாத்திரம் மிகச் செழுமையாக இருப்பதால், எகிப்தின் மொத்த ஜனத் தொகையில் பத்தில் ஒன்பது பேர் விதம் அங்குதான் வசிக்கிறார்கள்.

நைல் நதி அந்த நாட்டில் போக்கு வரத்துக்கும் இன்றியமையாததாக இருந்து வருகிறது. பிரயாணிகளும் பண்டங்களும் பாலைவனப் பிரதேசத்தைக் கடந்து எகிப்தைச் சேர்ந்த பல இடங்களுக்கும் செல்லுவதற்கு இன்னும் ஏராளமான ஒட்டகங்களையே உபயோகித்து வருகிறார்கள்.

எகிப்தின் பொருளாதார சுபிட்சத்துக்கு அந்த நாட்டின் ஏற்றுமதி வர்த்தகம் உயிர் நாடியாகும். எகிப்திலிருந்து வெளிநாடுகளுக்குப் பஞ்சு ஏராளமாக ஏற்றுமதியாகிறது. அதற்கு அடுத்தபடியாக சர்க்கரை, வெங்காயம் முதலிய பொருள்களும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

கல்வித் துறையில் எகிப்து மிகவும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. எகிப்தின் தலைநகரான கெய்ரோவில் உள்ள அஷார் சர்வகலாசாலை ஆசியாவில் உள்ள சிறந்த சர்வ கலாசாலைகளில் ஒன்றாகக் கருதப்படுகின்றது. ஆப்பிரிக்காவிலேயே மிகப் பெரிய பட்டணம் எகிப்து நாட்டின் தலைநகராக விளங்கும் கெய்ரோதான். அந்நகரின் ஜனத் தொகை பதினறு லட்சமாகும்.

சூயஸ், போர்ட் செட் இவ்விரண்டும் எகிப்தின் முக்கிய துறைமுகங்களாகவும் கேந்திரப் பிரதேசங்களாகவும் இருக்கின்றன.

இன்று எகிப்தை ஆட்சி புரிந்துவரும் முதலாவது பரூக் மன்னருக்கு முப்பத்திரண்டு வயதாகிறது. அவர் இவ்வருஷ ஆரம்பத்தில் நாரிமன் ஸாடெக் என்ற பெண்ணை இரண்டாவது மனைவியாக விவாகம் செய்து கொண்டார். எகிப்து ராணியாகும் பாக்கியம் பெற்ற நாரிமனுக்குப் பதினேழு வயதாகிறது.

சென்னை நகரப் போலீஸ் கிரைம் பிராஞ்ச் இன்ஸ்பெக்டரான ஸ்ரீ எஸ். ராமநாதனது சகோதரர் குடியாத்தம் வக்கீல் ஸ்ரீ ஏ. பட்டாபி ராமய்யரது குமாரர் ஸ்ரீ கே. பி. ராமலிங்கம் பி. இ. (ஆனர்ஸ்) அவர்களுக்கும், (காலஞ் சென்ற) கலப்பட்டி கே. எஸ். வி. ராஜுவின் குமாரத்தி சௌ. மீனாக்ஷிக்கும் சென்னை தேனாம் பேட்டையில் சென்ற மாதம் சிறப்பாக விவாகம் நடந்தது. திருமணத்துக்குச் சென்னை நகரின் அதிகாரிகள் பலரும் பிரபலஸ்தர்களும் நண்பர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்!



# விபரீத உபசாரம்

## கி.ரா.கோபாலன்

சிறுகுடி அழகான கிராமம். பெயருக்குத் தகுந்தாற்போல் மிகவும் சிறிய கிராமம். காவிரி யாற்றங்கரையிலுள்ள அந்தக் கிராமத்தின் பசுமையும் வளமையும் மனோரம்மியமானது. அந்தக் கிராமத்திலுள்ள பதினைந்து பதினாறு வீடுகளில் இரண்டு குடித்தனக்காரர்களைத் தவிர மற்றக் குடும்பத்தினர்களெல்லாம் ஏழை விவசாயிகள். செல்வச் செழிப்போடு விளங்கிய அந்த இரு குடும்பத்தினர்களும் நெருங்கிய உறவினர் இல்லா விட்டாலும் ஒரே மரபினர்.

வேதாசலம் பிள்ளை பத்துவேலி மிராசுதார். தணிகாசலம் பிள்ளையும் ஏறக்குறைய அவருக்குச் சமதையான பூஸ்திதி படைத்தவர்தான். இந்த இரு குடும்பத்தினருக்கும் கிராமத்திலுள்ள சொத்து, பெருமை, கௌரவம், அதிகாரம் எல்லாம் அவர்களுடைய மூதாதையர்களால் சேர்த்து வைக்கப் பட்டவைகளே. அவர்களுடைய சொந்த உழைப்பினாலோ, சாமர்த்தியத்தாலோ, அதிருஷ்டத்தாலோ ஏற்பட்ட தென்னவென்றால் சம அந்தஸ்திலுள்ள அந்த இரு குடும்பத்தினரும் போட்டி, பொறாமை உணர்ச்சிகளில்லாமல் மிகவும் ஒற்றுமையாக இருந்ததுதான். ஒரு சிறிய கிராமத்தில் இரு பெரிய மிராசுதார்கள் போட்டி பொறாமையின்றி வாழ்ந்து வந்தார்களென்றால் அது ஆச்சரியத்திற்குரிய அம்சந்தானே! வேதாசலம் பிள்ளையும் தணிகாசலம் பிள்ளையும் மிகவும் ஒற்றுமையுடன் இருந்தார்கள். ஒருவரிடம் ஒருவருக்கு மரியாதையும் அன்பும் மதிப்பும் உண்டு. ஒருவரை யொருவர் கலந்தாலோசிக்காமல் எதையும் செய்ய மாட்டார்கள். பெரிய மிராசுதார்களாகக் கருதப்படும் அவர்களுடைய ஒற்றுமையால் கிராமத்திலேயே ஒரு அமைதியும் சந்தோஷமும் தாண்டவமாடியது. கிராமத்தில் சிறு பூசல்கள் ஏதேனும் நடந்தாலும் அதைத் தீர்த்து வைப்பதில்தான் இருவருடைய கருத்தும் ஏகோபித்திருக்கும்.

தணிகாசலம் பிள்ளைக்குக் கங்காதரன் என்று ஒரு மகன். வேதாசலம் பிள்ளைக்குக் கோமதி என்று ஒரே பெண். கோமதி கங்காதரனை விட மூன்று வயது சிறியவள். வேதாசலத்தின் மனைவி கர்ப்பிணியாக இருக்கும் பொழுதே தணிகாசலம் பிள்ளை ஊரிலுள்ள தெய்வங்களை யெல்லாம் பிரார்த்தித்துக் கொண்டார்; அந்த உத்தமியின் வயிற்றில் பிறக்கப்போகும் குழந்தை பெண்ணாக இருக்க வேண்டுமென்று. தன் மகனுக்கு மனைவியாகக் கூடிய ஒரு பெண் உலகத்தில் பிறக்க வேண்டுமானால் அது வேதாசலத்தின் குடும்பத்தில் பிறந்த பெண்ணாகத்தா னிருக்க வேண்டும் என்பது அவருடைய அபிப்பிராயம். அவருடைய பிரார்த்தனை பலித்து விட்டது. கோமதி பிறந்தாள். கோமதி பிறந்த மூதல் நாளே வேதாசலம் தணிகாசலத்தினிடம் வந்து அவருடைய பெண் தம்முடைய மகனுக்கே உரியவள் என்ற வாக்குறுதியையும் பெற்றுக் கொண்டார். தணிகாசலத்திற்கும் அதைவிடச் சந்தோஷமளிக்கக் கூடியதாய் வேறொன்று மிருக்கவில்லை.

கங்காதரனும் கோமதியும் மிகவும் செல்வமாக வளர்க்கப்பட்டது மன்றி, இருவரும் ஆரம்பத்தி லிருந்தே அன்யோன்யத்துடன் நெருங்கிப் பழகத் தொடங்கினர். அவர்கள் இருவரும் நெருங்கிப் பழகுவதற்குரிய சந்தர்ப்பங்களை அவர்களுடைய பெற்றோர் களே ஆர்வத்துடன் ஏற்படுத்திக் கொடுத்தனர். மற்றவர்கள் பரிகாசமாகக் கோமதியையும் கங்காதரனையும் பார்த்துப் புருஷன் பெண்சாதி என்ற சொல்லை உபயோகித்து வந்தாலும் அவர்களுடைய பிஞ்சு உள்ளத்திலே அவ்வுணர்ச்சி ஆழமாகப் பதிந்து விட்டது.

ஒவ்வொரு வருஷமாக ஓடிக் கொண்டிருந்தது. வயதிற்கு வயது ஏற்பட்ட அனுபவத்தாலும் அறிவாலும் கங்காதரனுக்கும் கோமதிக்கும் ஏற்பட்டுள்ள காதல் உணர்ச்சி மொட்டாகி மலராகி மலர்ந்து மணம் வீசத் தொடங்கியது. கோமதியின் பருவம் பக்குவமான பேரழகை அவள் தேகத்தில் அணுவுக்கணு நிரப்பி வைத்துக் கொண்டிருந்தது. கங்காதரனின் இளமை ஆண்மையின் பூரண தேஜஸையும் அவன் உடலில் பிரகாசிக்க வைத்தது. அவர்கள் பேச்சு, சிரிப்பு, பார்வை, நடை, உடை, பாவனை எல்லாவற்றிலுமே ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டுப் பெற்றோர்களின் மனதில் ஒரு தூண்டுதலை உண்டாக்கி வைத்தது. "இனி தாமதிக்கக் கூடாது. இந்த வருஷம் எப்படியாவது கல்யாணத்தை முடித்து விட வேண்டியதுதான்" என்றார் தணிகாசலம். "ஆமாம்! அதைத்தான் நானும் உங்களிடம் சொல்லணுமென்று நினைச்சேன்" என்றார் வேதாசலம்.

வேலைக்காரன் இரண்டு கண்ணாடி டம்ளர்களில் காப்பியைக் கொண்டுவந்து இருவருக்கும் கொடுத்தான். இருவரும் பருகினர். வேதாசலம் காப்பியைப் பருகியதும் டம்ளரைப் பக்கத்திலிருந்த மேஜைமீது வைக்கப் போனார். அவர் கையிலிருந்த டம்ளர் நழுவித் தரையில் விழுந்து சுக்குநூறாக உடைந்தது. இதைப் பார்த்த தணிகாசலம் பிள்ளை திடுக்கிட்டு விட்டார். வேதாசலம் பிள்ளை "அதனால் பாதகமில்லை. கை வழுக்கி விட்டு விட்டது. இந்தக் கண்ணாடிப் பண்டங்களே இப்படித்தான். இது வரையில் நானே இருபது இருபத்தைந்து கிளாஸ் உடைத்திருக்கிறேன்" என்றார். தணிகாசலமும் 'ஆமாம்' என்று சொல்லி வைத்தார். ஆனால் கண்ணாடி டம்ளர் கீழே விழுந்து உடைந்த அதிர்ச்சி மாத்திரம் அவரை விட்டு நீங்கவே யில்லை.

கண்ணாடி டம்ளரை மேஜைமீது வைக்கப் போகும் பொழுது வேதாசலம் நல்ல நினைவோடும் நிதானத்துடனும்தான் இருந்தார். ஜாக்கிரதையாகத்தான் அதை மேஜைமீது வைக்க முயற்சித்தார். அந்த டம்ளரைக் கெட்டியாகப் பிடித்திருந்த அவருடைய கையில் ஐந்து விரல்களில் ஒன்றுகூடச் சக்தியை இழந்து விடவில்லை. ஆனால் எப்படியோ அந்த டம்ளர் அவர் கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்துவிட்டது. கண்ணாடி டம்ளர் போனால் போகட்டும். அவர் உயிரில் அவருக்குத் தீவிர நம்பிக்கை இருந்தது. ஆனால் அன்று இரவே முன்னெச்சரிக்கை எதுவுமில்லாமல் எமன் அவர் உயிரைக் கவர்ந்து கொண்டு போய் விட்டான். இந்தத் துக்ககரமான நிகழ்ச்சியை நடுநிசியில் கேட்ட பொழுது தணிகாசலம் பிள்ளைக்கு அன்று மத்தியானம் கண்ணாடி டம்ளர் வேதாசலத்தின் கையிலிருந்து நழுவி விழுந்த அதிர்ச்

சியைவிட ஆயிரம் ஆயிரம் மடங்கு அதிக அதிர்ச்சியை அது உண்டாக்கியது.

வேதாசலம் பிள்ளை திடீரென்று இறந்து போனதால் கங்காதரனுக்கும் கோமதிக்கும் நடத்தி விடுவதாய் இருந்த கல்யாணம் நின்று போய் விட்டது.

முதல் வருடம் வேதாசலத்தின் உயிரில் ஆசை வைத்த எமனுக்கு அடுத்த வருட ஆரம்பத்தில் அந்தக் கிராமத்தில் தனிகாசலம் பிள்ளையின் உயிரில்தான் கண் சென்றது. தகப்பனாரை இழந்து எப்படி கங்காதரன் தவித்தானோ அப்படியே கோமதியும் தன் தகப்பனை இழந்து தவித்தாள். சிறுகுடிக் கிராமமே ஒருவருக்குப் பின் ஒருவராக இரண்டு பெரிய மிராசுதார்களையும் துணைவர்களையும் இழந்து தவித்தது.

✶

ஏதோ ஒரு லட்சியத்தில் இரண்டு குடும்பத் தலைவர்கள் வாழ்ந்தார்கள். தங்களுடைய உயிர், மூச்சு உள்ள காலத்திலேயே ஏதோ ஒரு லட்சியத்தையும் ஆவலையும் நிறைவேற்றி விட வேண்டுமென்றுதான் அவர்கள் நினைத்தார்கள். ஆனால் விதி விளையாடி விட்டதே! அதனால் என்ன! அந்த இரண்டு பெரியவர்களின் லட்சியத்தையும் ஆவலையும் பூர்த்தி செய்ய அவர்களுடைய சந்ததிகளால் முடியாதா! கங்காதரனுக்கும் கோமதிக்கும் உள்ள காதல் சாதாரணமானதா! அதனிடமும் விதி வந்து விளையாடி விடுமா!

தனிகாசலம் பிள்ளைக்கு ஆண் சந்ததி கிடையாது. அவர் இறந்தவுடனே அந்தக் குடும்பத்தின் பூர்வீக சொத்துக்களுக்குப் பாத்தியதை கொண்டாடும் பங்காளிகள் குறைவில்லாமல் இருந்தனர். இந்தச் சொத்தில் கிடைத்த வரையில் ஆதாயம் என்றெண்ணி ஒருவருக்குப் பின் ஒருவராக புற்றீசல் போல் கிளம்பினர். தனிகாசலத்தின் மனைவிக்கும் பெண்ணுக்கும் கொஞ்சம் மனமிரங்கி ஜீவனாம்சமாக சொற்பச் சொத்துக்களை ஒதுக்கிவிட்டு மற்றவைகளைப் பங்காளிகள் பங்கிட்டுக்கொண்டு விட்டனர்.

கோமதியும் அவளுடைய தாயாரும் ஒரு சிறிய வீட்டில் வாழ்ந்து வந்தனர். தனிகாசலத்தின் குடும்பத்திற்கு ஏற்பட்ட துர்ப்பாக்கியமான நிலையை எண்ணிக் கங்காதரன் மிகவும் மனம் கலங்கினான். கோமதியிடம் அவனுக்கு அளவற்ற பச்சாதாபமும் இரக்கமும் தோன்றியது. நாளடைவில் இந்தப் பச்சாதாபமும் இரக்கமும் அவன் உள்ளத்தில் இயற்கையாயிருந்த காதலையும் கிரகணமாகப் பிடித்து விழுங்கத் தொடங்கியது. அவனுடைய இரக்கம் ஏழைக்கு இரக்கம் காட்டுவது போலாகிவிட்டதே தவிர, அன்பிற்கும் காதலுக்கும் ஆக்கமளிப்பதாய் இல்லை.

ஊரில் அவன் ஒருவன்தான் இப்பொழுது பெரிய மிராசுதார். ஊரின் நாட்டாண்மை அதிகாரம் எல்லாம் அவன் வசமே இருந்தது. கோமதியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று இளமையிலிருந்து எண்ணிக் கொண்டிருந்த அவனுடைய உள்ளம் அந்த எண்ணத்தை நழுவ விடத் துணிந்தது. உள்ளத்தரங்கமாக வளர்ந்து விட்ட காதலை வாழ்க்கைத் தரத்தின் ஏற்றத் தாழ்வு கௌரவம் அந்தஸ்து இவைகளையே அளவு கோலாக வைத்து அலசிப் பரீட்சை செய்து திரஸ்காரம் செய்து விடத் துணிந்தான்.

கோமதியும் அவளுடைய தாயும் மிகவும் ஏழ்மை நிலையில் ஜீவனை ஓட்டி வந்தாலும் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை அவர்களுக்குப் பலமானதாகவே இருந்தது. என்றோ ஒரு நாள் தான் கங்காதரனுக்கு மனைவியாகப் போகிறோம் என்ற ஆசைக் கனவில்தான் நாட்களை ஓட்டி வந்தாள். அந்த உரிமை உணர்ச்சியில்தான் கங்காதரன் செய்த உதவிகளை மறுக்காமல் ஏற்றுக் கொண்டாள் கோமதி.

நாட்கள் ஓடின. ஒவ்வொரு நாளாக எண்ணிக் கொண்டு தானிருந்தாள் கோமதி. நாளுக்கு நாள் ஆட்கள் மூலமாக கங்காதரனிடமிருந்து ஏதேனும் செய்திகள் வருமே தவிர அவனை நேரில் பார்ப்பதே அரிதாக இருந்தது. குடும்ப நிர்வாகத்தையும் கிராமப் பொறுப்புக்களையும் நிர்வகிக்கும் அவனுக்கு வேலைத் தொந்தரவு அதிகமிருக்கலாம் என்று எண்ணி மனம் சமாதான மடைந்திருக்



தான் கோமதி. இருப்பினும் ஒவ்வொரு சமயம் அறியாமலேயே ஏதோவொரு நினைவும் ஏற்படும். அவன் ஊமைக்கனவு கண்டு கொண்டிருந்தானே தவிர கல்யாணத்தைப் பற்றிக் கங்காதரன் கவலைப்படுவதாக அவளுக்குத் தெரியவே யில்லை. ஒருவேளை தங்களுடைய ஏழ்மை நிலையைக் கருதி அவன் தன்னை நிரஸ்காரம் செய்து விடுவானோ என்ற நினைப்புதான் நாளுக்கு நாள் அதிகமாயிற்று.



இந்த நிலையில் அவளுக்கு ஒரு துடிப்பை உண்டாக்கியது. 'ஏன் அவரையே நாம் மனம் விட்டுக் கேட்டுவிடக் கூடாது' என்று எண்ணினாள். ஒரு நாள் வேலைக்காரன் மூலமாக அவனை அவளிடம் பார்க்க விரும்புவதாகச் சொல்லி அனுப்பினாள். கங்காதரனும் வந்து சேர்ந்தான்.

அவனைக் கண்டதும் கோமதி ஆனந்தத்தால் துள்ளிக் குதித்து, "அப்பாடா! வழி தெரிந்ததா! அடியோடு மறந்து விட்டீர்களோ என்ற நிலை தான் எனக்கு..." என்றாள்.

கங்காதரன் ஒரு போலிச் சிரிப்பை முகத்தில் உண்டாக்கிக் கொண்டு, "என்ன கோமதி! அப்படிச் சொல்லி விட்டாய். எனக்கு வேலைத் தொந்தரவு ஒழியவில்லை. நான்தான் அடிக்கடி ஆட்கள் மூலமாக விசாரித்துக் கொண்டிருக்கிறேனே! உனக்கு வேண்டியவைகளை யெல்லாம் அவர்கள் மூலமாகத் தாராளமாக நீ கேட்டனுப்பலாம். நேற்றுக் கூட இரண்டு சேர் நெய் கொண்டு வந்து கொடுக்கச் சொன்னேனே ......இன்று ஒரு வண்டி விறகு வெட்டிக்கொண்டு வருவான்......" என்றான்.

"எல்லாம் சரிதான். உங்கள் உபகாரத்தை யெல்லாம் பெற்றுக் கொள்ளும் உரிமை உண்டு என்று நினைத்துத்தான் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் உங்களைப் பார்ப்பது போல, நெய் பால் இவைகளை யெல்லாம் பார்த்த போது மனத்திற்கு ஆறுதல் ஏற்படவில்லையே. இவைகளை யெல்லாம் விட எனக்கு நீங்கள்தானே பெரிது......" என்றாள் கோமதி.

கங்காதரன் ஒரு பெருமூச்சு விட்டான். ஏதோ அவளுக்குப் பதில் சொல்ல நினைத்தான். நெஞ்சி லிருந்து வார்த்தைகள் எழும்புவது கடினமாய் இருந்தது. எப்படியோ ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டு நினைத்ததைச் சொல்லி விட்டான். "நீ ஏதோ தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். கோமதி......ஏதோ குழந்தைப் பருவத்தில் விளையாட்டாகப் பெரியோர்கள் பேசிக் கொண்டதை மனதில் வைத்துக் கொண்டு ஏதோ மனக் கோட்டை கட்டிக் கொண்டிருக்கிறாய் என்று நினைக்கிறேன். உனக்கே தெரியும், இன்று நிலைமை எவ்வளவு மாறி விட்டதென்று......... உங்கள் குடும்பத்தோடு நெருங்கிப் பழகியதற்காக ஆதரவாக நிற்கும் உங்களுக்கு எல்லா வகையிலும் உதவிசெய்ய நான் கடமைப்பட்டிருக்கிறேன். உனக்காக ஒரு நல்ல வாலிபனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைப்பதில்தான் என்னுடைய சிரத்தை யெல்லாம் இருக்கிறது......"

இந்த வார்த்தைகள் கோமதியைக் கலங்க வைத்துவிட்டது. இந்த வார்த்தைகள் கங்காதரனின் வாயிலிருந்து வந்தவைகள் தானா என்று அவளுக்குச் சந்தேகம் எழுந்தது. அவள் ஆசைக் கனவுக ளெல்லாம் மணல் கூண்டாகிச் சரிந்து விழுந்தது. அவள் நெஞ்சு விம்மியது. கண்களில் கண்ணீர் பெருகிப் பிரவாகமாயிற்று. "ஓஹோ! அப்படியா......! நான் ஒரு பைத்தியக்காரி. இன்று ஏற்பட்டுள்ள மாறுதலை அறிந்து கொள்ளாதது என் புத்திப் பிசகுதான். இப்பொழுது எங்கள் நிலைமையும் மாறிவிட்டது. உங்கள் நிலைமையும் மாறிவிட்டது. இப்பொழுது இந்த ஆசை தகாதுதான். ஆனால் இனிமேல் உங்கள் மற்ற உதவிகளை நாங்கள் ஏற்றுக்கொள்வது மிகவும் தவறு. எங்களுக்காக இனிமேல் எவ்விதமான கவலையும் படவேண்டாம்" என்று படபடப் போடு சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்னும் கங்காதரன் கோமதிக்காகச் செய்யும் உதவிகளை நிறுத்தாமல் செய்ய முற்பட்டான். ஆனால் கோமதி அவைகளை மறுத்துத் திருப்பி விட்டாள். இருந்தாலும் அவளுக்கு எந்த வகையிலாவது உதவி செய்ய வேண்டுமென்பதுதான் அவன் தீர்மானம்.

*

மாதம் இரண்டு ஓடியது! திடீரென்று ஒரு நாள் கோமதிக்கும் கூடவாசலிலிருக்கும் மோட்டார் டிரைவர் சபாபதிக்கும் ஒருநாள் கூடவாசலில் விவாகம் நடக்கப் போவதாகக் கேள்விப் பட்டான். அதற்காகக் கோமதியும் அவள் தாயாரும் முதல் நாளே கூடவாசலுக்குப் போய் விட்டதாகவும் அறிந்தான். இதை அறிந்ததும் அவர்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் ஏதேனும் உதவிசெய்ய வேண்டுமென்ற துடிப்பு அவனுக்கு ஏற்பட்டது. மறுநாள் வண்டியில் ஏறிக் கூட வாசல் வந்து சேர்ந்தான். கோமதிக்குத் தான் ஐந்நூறு ரூபாய் அன்பளிப்பாகக் கொடுப்பதாய் அவளுடைய கணவன் சபாபதியிடம் கொடுத்து விட்டு வந்து சேர்ந்தான். தன் மனைவிக்கு இவ்வளவு பெரிய தொகையைப் பரிசாக அளிக்கக் கூடிய மனிதனைப் பற்றி முதலில் சபாபதிக்குத் திகைப்பாய்த்தா னிருந்தது. அவனுக்குச் சிறிது சம்சயமும் ஏற்படத் தொடங்கியது. கங்காதரனைப் பற்றிக் கோமதியிடம் அலசி அலசி விசாரிக்கத் தொடங்கினான். அவள் தங்கள் குடும்பத்தினருக்கும், கங்காதரன் குடும்பத்தினருக்கும் நெடு நாட்களாய் இருந்த நட்பை மாத்திரம் சொன்னாள். இதனால் அவனுடைய மனது ஒரு விதமாகச் சாந்தியடைந்தது.

கோமதியின் கணவன் சபாபதி ஒரு சாதாரண மோட்டார் டிரைவர்தான். ஏதோ ஒரு பணக்காரர் வீட்டில் மோட்டார் ஓட்டிக்கொண்டிருந்தான். நல்ல குணமும் ஒழுங்கான நடத்தையும் உள்ளவன். குறைந்த சம்பளத்தைக் கொண்டு அடக்கமாக மனைவியோடு குடித்தனம் நடத்தி வந்தான். இருந்தாலும் அவர்கள் ஏழ்மை நிலை உலகின் கண்களுக்குப் புலப்படாமலில்லை.




"என்னய்யா! இந்த மாம்பழம் புளிக்குமா?"

"சேச்சே! புளிக்காதுங்க. சர்க்கரைச் செட்டியார் தோட்டத்துப் பழமாக்குதுங்களே!"

கங்காதரன் கிராமத்திலிருந்தாலும் அடிக்கடி கூட வாசலில் கோமதி குடித்தனம் நடத்தும் நிலையைப் பற்றிக் கவலைப்பட்டு விசாரித்த வண்ணமாகவேதான் இருந்தான்.

ஒருநாள் இரண்டு புடவைகளையும், சோப்பு, சீப்பு, பழம் போன்ற சாமான்களையும் வாங்கிக் கொண்டு கோமதியின் வீட்டுக்குப் போனான். அப்பொழுது கோமதியின் கணவன் சபாபதி வீட்டில் இல்லை. கங்காதரனைக் கண்டதும் திடுக்கிட்டாள். அவன் அந்த வேளையில் அங்கு வந்தது அவளுக்குத் தர்ம சங்கடமாகத் தானிருந்தது. இருந்தாலும் வந்தவனை உபசரித்துத் தானே யாக வேண்டும். அவனை வரவேற்றுப் பாயை விரித்து அதில் அமரச் சொன்னாள். வெற்றிலை பாக்குத் தட்டை எடுத்து வைத்தாள்.

கங்காதரன் தன் கையில் கொண்டு வந்திருந்த பையிலிருந்து புடவை, பழம் முதலியவைகளை எடுத்து வைத்துவிட்டு, "இதோ பார் கோமதி! உனக்காக இரண்டு புடவை வாங்கி வந்தேன். உனக்குப் பிடித்திருக்கிறதா!" என்றான்.

இதைக் கேட்டதும் சட்டென்று கோமதியின் முகம் சுருங்கியது. அவள் வெறுப்படைந்த குரலில் "இதெல்லாம் எனக்கு எதற்காக! உங்கள் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை" என்றாள்.

"ஏன் நான் வாங்கி வரக் கூடாதா! என் மனம் கேட்க வில்லை. உனக்கு ஏதேனும் உபகாரம் செய்தால் தான் என் மனசுக்கு ஆறுதல்......" என்றான் இரக்கமான குரலில்.

கோமதி அவன் முகத்தைக் கூட ஏறிட்டுப் பார்க்கவில்லை. "நான் உபகாரத்தை எதிர்பார்த்த நாளெல்லாம் போய்விட்டது. அப்பொழுது நீங்கள் செய்த உதவிக்கெல்லாம் நன்றி செலுத்துகிறேன்: எனக்கு இப்பொழுது உங்கள் உதவி தேவையில்லை. என் புருஷரை மிஞ்சி நான் வேறொருவருடைய உதவியை இப்பொழுது எதிர்பார்க்கவே யில்லை" என்றாள்.

"கணவன் தான் உதவி செய்ய வேண்டுமென்பது உண்டா! உனக்கொரு சகோதரனைப் போல என்னை நினைத்து என் உதவிகளை ஏற்றுக் கொள்ளக் கூடாதா!" என்றான்.

"சகோதரனா...சகோதரன் என்ற எண்ணம் திடீரென்று மனத்தில் முளைத்துவிடுமா! வேண்டுமென்று போலித்தனமாக மனத்தில் நினைத்துக் கொண்டு விட முடியுமா! அவரை விதை போட்டுக் கொடி கிளைப்பிய பின், இது துவரை என்றால் உலகம் ஒப்புக் கொள்ளுமா!...சிறு குழந்தையிலிருந்து நாம் எப்படிப் பழகினோம் என்பதை மறந்துவிட முடியுமா!..." என்றாள் ஆவேசம் கொண்டவள் போல். அவள் நெஞ்சு விம்மியது.

கங்காதரன் மௌனமாக உட்கார்ந்திருந்தான். அவனால் ஒன்றும் பதில் பேச முடியவில்லை. புடவையும் மற்றச் சாமான்களும் பாயிலேயே வைக்கப்பட்டிருந்தன. அவன் மெதுவாக எழுந்து வெளியே போய் விட்டான்.

கோமதியின் கணவன் சபாபதி வந்தான். தாழ்வாரத்தில் பாய் விரிக்கப்பட்டு அதில் வெற்றிலைத் தட்டு, புதுப் புடவைகள், பழம், சோப்பு முதலியவைகள் வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தான்.

இவையெல்லாம் அவனுக்கு வியப்பை உண்டாக்கின. "கோமதி" என்று அதட்டும் குரலில் கூப்பிட்டான். கோமதி அவன் எதிரில் வந்து நின்றாள். அவள் முகம் சோபை இழந்திருந்தது.

"இதெல்லாம் என்ன!" என்று பாயில் வைக்கப்பட்டிருந்த சாமான்களைச் சுட்டிக் காட்டிக் கேட்டான்.

அவளால் பளிச்சென்று பதில் சொல்ல முடியவில்லை. தயங்கிய படியே சொன்னாள். "எங்கள் ஊரிலிருந்து ஒருவர் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார்..." என்றாள்.

"பெரிய பண்ணைக்காரரா! தெரியும் அவனை எனக்கு. திருட்டுப் பயல். என் பெண்டாட்டிக்குப் புடவை வாங்கிக் கொண்டு வந்து தர அவனுக்கு என்ன சம்பந்தம்...! பணத்திமிர். எல்லாம் எனக்குத் தெரியும். உங்களுடைய பழைய கதையையெல்லாம் நான் விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்கிறேன். நான் இல்லாத போது இந்த வீட்டில் நுழைய அவனுக்கு என்ன துணிச்சல்...! வஞ்சனைக்காரி. எல்லாம் உன் சாகஸம்" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, "நான் தெரியாத்தனமாக உன்னைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டேன். இனி உன் முகத்திலேயே விழிக்க மாட்டேன். நான் சாகப் போகிறேன். ஆமாம். இனிமேல் செத்து விடுவதுதான் நல்லது" என்று சொல்லிவிட்டுச் சட்டென்று வெளியே போய்விட்டான்.

கோமதி நின்ற இடத்திலேயே சிலை போல நின்று விட்டாள். அவள் இருதயமே நின்றுவிடும் போலிருந்தது. கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது.

★

அன்று சென்றவன்தான் சபாபதி. எங்கு சென்றான் என்றே தெரியவில்லை. கோமதி துயரத்தீயிடை விழுந்து துடித்துக் கொண்டிருந்தாள். ஒருவாரம் சென்ற பின் ஒரு நாள் யாரோ ஒருவன் கோமதியிடம் வந்து அவளுடைய கணவன் ஓட்டிச் சென்ற கார் ஏதோ ஒரு மரத்தில் மோதியதால் அவனுக்குப் படுகாயம் ஏற்பட்டு உடனேயே உயிர் இழந்து விட்டான் என்ற துயரச் செய்தியைச் சொன்னான். இதைக் கேட்டதும் கோமதி கால்கள் தள்ளாட மூர்ச்சித்து விழுந்து விட்டாள். துயரமும் துக்கமும் அவளைப் பொறுத்தவரையில் கரையற்ற கடலாகி விட்டது.

கோமதியின் கணவன் கார் விபத்தில் இறந்த செய்தியை மறுநாள் கங்காதரன் அறிந்தான். இச்செய்தியைக் கேட்டதும் துடியாய்த் துடித்துக் கொண்டு வண்டியைப் பூட்டச் சொல்லி அதில் ஏறிக் கொண்டு குடவாசலை நோக்கி ஓட்டச் சொன்னான்.

வண்டி அதிவேகமாக குடவாசலை நோக்கி வந்து கொண்டிருந்தபோது, எதிரில் வந்த மனிதன் ஒருவன் கையமர்த்தி வண்டியை நிறுத்தினான். வண்டியும் நின்றது. அந்த மனிதன் கையில் துணி மூட்டை ஒன்று இருந்தது. "நீங்கள் தானே சிறுகுடி பெரிய பண்ணை முதலாளி!" என்றான். கங்காதரன் "ஆமாம்" என்றான்.

அந்த மனிதன் தன் கையிலிருந்த மூட்டையை வண்டியில் வைத்துவிட்டு, "நேற்று கார் மரத்திலே மோதினதாலே டிரைவர் சபாபதிப் பிள்ளை இறந்து விட்டாரே, தெரியுமா!" என்றான்.

"தெரியும். ஏன்!" என்றான் கங்காதரன்.

"அவருடைய சம்சாரம் இந்த மூட்டையை உங்களிடம் பத்திரமாகக் கொடுக்கச் சொன்னாங்க" என்றான்.

"இது என்ன!" என்றான் கங்காதரன்.

"எனக்கென்ன தெரியும்! நீங்களே பாருங்க" என்றான் அந்த மனிதன்.

கங்காதரன் மூட்டையைப் பிரித்துப் பார்த்தான். அதில் இரண்டு சேலை, ரவிக்கை, நகைகள் பணம் எல்லாம் இருந்தன. இவைகளைப் பார்த்ததும் அவன் துள்ளிக் குதித்தான். "அவள் எங்கே...!" என்று கேட்டான்.

"அந்த அம்மா வீடு வாசலை எல்லாம் விட்டுட்டு எங்கோ போயிடுச்சு. போகும் போதுதான் இதை என்னிடம் கொடுத்து உங்களிடம் தவறாமல் கொடுத்திடச் சொன்னாங்க. அதிலே ஒரு கடிதாசு கூட எழுதி வைச்சிருக்கு..." என்றான்.

கங்காதரன் பதட்டத்துடன் கடிதத்தைத் தேடினான். ஒரு புடவையின் மடிப்பிற்குள்ளே ஒரு துண்டுக் கடிதம் எழுதி வைக்கப்பட்டிருந்தது.

அந்தக் கடிதத்தில் என்ன எழுதி இருந்தது! மனமுடைந்த ஒரு பெண்ணின் கையெழுத்து எப்படி இருக்கும்! ஒவ்வொரு எழுத்தும் மனப் பதட்டத்தோடு எழுதப்பட்டிருக்கிறது என்பது ஒழுங்கின்றி எழுதி இருப்பதிலிருந்து தெரிந்தது:

"உங்கள் உபகாரம் எனக்கு எவ்வளவு நன்மையை உண்டாக்கியது என்பதை நீங்கள் இப்பொழுதாவது உணர்ந்து கொண்டிருப்பீர்கள். இதற்காக நான் எப்படி நன்றி செலுத்த முடியும்! உங்களைக் கடவுள் மன்னித்துக் காப்பாற்றட்டும். நீங்கள் சிந்தித்தோ சிந்திக்காமலோ செய்த விபரீதமான உபகாரங்களினால் ஒரு பெண்ணின் கதி என்னவாயிற்று என்பதை நீங்கள் உணர்ந்தால் போதும். அன்புக் கொடியின் அடிவேரைக் கெல்லி விட்டு அதற்கு வெந்நீர் பாய்ச்சி வளர்க்கப் பாடு படுவதுபோல் தானிருந்தது உங்கள் உபசாரமும் உபகாரமும்.

என்னைப்பற்றிய கவலை இன்றுடன் உங்களுக்கு ஒழிந்துவிட வேண்டுமென்பதற்காக நான் திக்குத் திசை தெரியாமல் சென்று கொண்டிருக்கிறேன்.

கோமதி"

அவன் அந்தக் கடிதத்தைத் தன்னை ஒருவிதமாகச் சமாளித்துக்கொண்டு படித்துவிட்டான். அதில் எழுதப்பட்டிருந்த ஒவ்வொரு வார்த்தையும், அவன் இருதயத்தில் ஒன்றுக்குப் பின் ஒன்றாகக் கூரிய முட்களை ஏற்றுவது போல்தான் இருந்தது. அவன் உள்ளமும் உடலும் நடுங்கியது.

ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுத்த மகா பாதகத்தை அவன் செய்து விட்டான். அவளுக்கு ஏற்பட்ட துர்ப்பாக்கியத்திற்குத் தானே பொறுப்பாளி என்பதை அப்பொழுது அவன் உணர்ந்து விட்டான். அவன் அவளுக்கு வேண்டுமென்றே தீங்கிழைத்தானா! அறிந்தே பிழை செய்தானா! எப்படி இருந்தாலென்ன! அவள் இன்று திக்கற்ற அனாதையாகி எங்கோ திண்டாடுகிறாள் என்றால் அதற்குக் காரணம் அவன்தான் என்பதை அவன் மனமே எடுத்துச் சொல்லியது. அவன் மனச்சாட்சிக்கே சமாதான ஆறுதல் சொல்ல முடியாத நிலையில் அவன் இருந்தான். தன் மனச்சாட்சிக்கெதிரே தன்னை ஒரு மனிதனாக்கிக் கொள்ளும் சக்தி அவனுக்கில்லை.

இன்று கங்காதரன் மனிதனாகத்தான் உலகில் வாழ்ந்து வருகிறான். ஆனால் அவன் வாழ்வில் எப்படிப்பட்ட நிரந்தரமான இருள் சூழ்ந்திருக்கிறது என்பது அவனுக்குத்தான் தெரியும்.



# அழகிற்கான அரிய சாதனம் 'ஓடில்'

*"I use OATINE CREAM and OATINE SNOW regularly to preserve my complexion and ensure freshness. I find OATINE delightful and I recommend it to all my friends."*

Sunanda Devi



**OATINE**

SNOW AND CREAM

Make sure seal is unbroken



பாவம் அந்தப் பெண்
மலேரியாவினால் என்ன
கஷ்டப்படுகிறாள்

## 'பாலுட்ரின்'
## அந்தத் தொல்லையினின்றும்
## என்னைப் பாதுகாத்துவருகிறது

எலும்பையே நொறுக்குவது போன்ற தினசரி குடும்ப வேலைகளுக்கு மேல் மலேரியா வேறு. பாவம் அந்தப் பெண் மெலிந்து வெறும் நிழல்போல ஆகிவிட்டாள். அந்த சாதுப்பெண் அதைப்பற்றி என்னதான் செய்கிறாளோ கடவுளுக்குத்தான் தெரியும். எப்போது பார்த்தாலும் அவள் நோய், நோய், நோய் என்று நோயினால் நொறுங்குகிறதைத்தான் நாங்கள் காண்கிறோம். ஆனால் தினமும் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் சாப்பிட்டு வந்தால் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் அவள் சுலபமாக குணமடையலாம். அவளது உதாரணம் என்னை உஷார்ப்படுத்திவிட்டது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை சாப்பிடுவதை நான் வழக்கமாக ஆக்கிக் கொண்டுவிட்டேன். என் குடும்பத்திலே மற்றவர்களும் இதைப் பின்பற்றுமாறு செய்து வருகிறேன். ஆகையினால் மலேரியா எனது வாசற்படிகளை அணுகுவது இல்லை

ICI **பாலுட்ரின்***
டிரேட் மார்க்



மலேரியாவுக்கு ஓர் அற்புதமான மருந்து

அணுவுக்கு ஒரு விலை

**இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்**

IX-P 139 TM





## கீல்வாதத்தினால் சித்திரவதைக்கு உள்ளானார் ;

## “க்ருஷன்” சிகிச்சைக்குப் பிறகு

# பூரணகுணம் அடைந்தார்

சமூக வாழ்வில் இவருக்குத் தோல்விதான். இவரது வியாபாரமும் மந்தமுற்றது. ஆனால் ஒரு முறை க்ருஷன் சிகிச்சைக்குப் பின்னர் பூரண குணம் அடைந்தார். அவரது கடிதமே அதை விளக்குகிறது :—

“பத்து மாதங்களுக்கு முன்னர் கீல்வாதத்தினாலும், நரம்பு வலிகளாலும் மிகுந்த அவஸ்தைப் பட்டேன். உடம்பெங்கும் வலியும், சில நாட்களில் படுக்கையினின்று எழுந்து வேலைக்குப் போக முடியாத படியும் இருந்தது. என்னை விசாரிக்க வந்த ஒரு நண்பன் “க்ருஷன்” உபயோகிக்குமாறு ஆலோசனை கூறினான். அவ்வாறே செய்ததில் வலிகள் நாளுக்கு நாள் குறைந்து வருவதை உணர்ந்தேன். அன்று முதல் தவறாமல் நான்தோறும் வேலைக்குப் போய் வருகிறேன். “க்ருஷனு”க்கு மெத்த வந்தனம்; நான் இப்பொழுது ஒரு புது மனிதனாகி விட்டேன். மிக்க சந்தோஷத்துடன் இதை ஒவ்வொருவருக்கும் சிபாரிசு செய்வேன்.”—A.R.

குடல்கள் அடைபடாமலும், மூத்திர கோசங்கள் நன்கு இயங்குமாறு வைத்திருப்பதுமே, கீல்வாத சிகிச்சைக்கு முதற்படி. மூத்திரம் நன்கு வெளிச் செல்லுமாறு செய்வதும், மலமிளக்கியாயும் ஆன இருவிதத் தொழிலால் “க்ருஷன்” மேற் சொன்ன வேலைகளைச் சுலபமாகவும் அபாயமின்றியும் செய்கிறது. தேகத்திற்குக் கெடுதி விளைவிக்கும் விஷப் பொருள்கள், மூத்திர கோசங்கள் வழியாக அறவே வெளித் தள்ளப்படுகின்றன. இயற்கையாகவும் ஒழுங்காகவும் இயங்குமாறு குடல்கள் மெல்லத் தூண்டப்படுகின்றன. இவற்றின் பலனாக கீல்வாத வலிகளின் மறைவும், புத்துயிர் பெற்ற பலமும், இளமையும் உண்டாகின்றன.

இன்றே “க்ருஷன்” உட்கொள்ள ஆரம்பியுங்கள். சில நாட்களுக்குள்ளாகவே ஆச்சரியகரமான மாறுதலை உணர்வீர்கள். எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




AD. KSID. No.17

# ஓர் ஒப்புயர்வற்ற
## ஈரல் சஞ்சீவி

க்யூமரேஷ் ஈரல், வயிற்றுக் கோளாறு களை நிவர்த்தி செய்வதில் ஓர் ஒப்பற்ற சஞ்சீவியாக இருப்பதுடன், ஈரல் குலைகளுக்கு அன்றாடம் வேலைகளை செவ்வனே செய்யும் பொருட்டு — ரத்தத்தை சுத்தம் செய்வது முதல், தேகத்திற்குத் தகுந்த போஷாக்கு அளித்து நோய் தொத்தாவண்ணமும் உதவி, அதிக ஊக்கத்தையும் ஊட்டுகிறது.

## க்யூமரேஷ்

ஈரலை நன்கு பாதுகாக்கிறது




ஓ. ஆர். வி. எச். லிட்.,

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்

# S. S. "ரஜுலா"

| | | | | |
|---|---|---|---|---|
| சென்னை | புறப்படும் தேதி | — | 1951 | அக்டோபர் 10௳ |
| நாகப்பட்டினம் | புறப்படும் தேதி | — | 1951 | அக்டோபர் 11௳ |

கப்பல் புறப்படும் தேதி காலை 6 மணிக்குமேல் சாமான்கள் ஏற்றப்படமாட்டா.

கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள் :

**சென்னையிலிருந்து 10-10-51 :** *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 10 மணிக்கும் ஊறுதன் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

**நாகப்பட்டினத்திலிருந்து 11-10-51 :** *பெர்த் வசதியற்ற டிக்கெட்டுள்ளோர் காலை 6 மணிக்கும் ஊறுதன் டிக்கெட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 10-10-51 பகல் 1 மணிக்கு மேல் வந்தால், வைத்திய பரிசோதனைக்கு தாமதமாகிவிடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினாங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டி, விருப்ப நாள் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இனாகுலேஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லுபடியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி லிமிடெட் |
| 7, அரமனைக்காரத் தெரு, மதராஸ் | முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4303

Registered as a newspaper in Ceylon

இக்கைகள் வேலையில் ஈடுபட்டிருக்கின்றன, ஆனால்...



...வேலையில் ஈடுபட்டிருக்கும் கைகளும் அழுக்கடைகின்றன!




அழுக்கடைந்த கைகள்
மறைந்திருக்கும்
அபாயத்தைத்
தாங்குகின்றன!

அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 180-50 TM